மங்களகரமான பொங்கல் வாழ்த்துக்கள் !



மாடர்ன் தியேட்டர்ஸின்

# ஆதித்தன் கனவு

பஸ்மாசூர மோஹினி நடனம்!

அன்னம் — குடலை காமிக்

வளைசல் கேலிக்கூத்து

முதலிய பல அரிய காக்ஷிகள் !

★

டைரக்ஷன் :

**T. R. சுந்தரம்,** B. A., B. Sc. (Leeds)

★

**மாடர்ன் தியேட்டர்ஸ் லிமிடெட்**

**சேலம் & மதுரை**

# மனைவிக்குச் சமைக்கக்கூட முடியாத அவ்வளவு களைப்பு





—"க்ருஷன்"

## அவளுக்கு ஆரோக்கியத்தையும் பலத்தையும் திருப்பி யளிக்கும் வரையில்

சரளா மிகவும் கவனக் குறைவுடன் களைப்பும் அடைந்தாள். அவளால் மாலை போஜனத்தைக் கூட சமைக்க முடியவில்லை, அவள் கணவன் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பிய போது அவளது சோம்பேறித் தனத்துக்காக அவளை கோபித்துக் கொண்டான். அன்று மாலை அவள் தோழியிடம் தன் கஷ்டத்தை எடுத்துணர்த்தியபோது அவள் தோழி "தினம் காலை உண்டிக்குமுன் 'க்ருஷன்' சாப்பிடு" என்று யோசனை கூறினாள்.

மூன்று வார காலத்திற்குள் சரளா ஓர் புது மனுஷியாகி விட்டாள்—மவுனமாகவும் கவலையுடனுமில்லாமல் சந்தோஷமாகவும் சுறுசுறுப்பாகவும் வீட்டுக் காரியங்களை சுலபமாகக் கவனித்துக் கொள்ள முடிந்தது. மாலை நேரம் ஆனந்தமாக அமைந்தது.

மிருதுவுடன் உத்திரவாதமான 'க்ருஷன்'ன் காரியம் கேவலம் சுத்தப்படுத்துவதைவிட மேலான பணி. உங்களுடைய ரத்தத்தில், ரத்த வோட்டத்தில் ஏன் உடம்பின் ஒவ்வொரு நரம்புகளிலுமே ஓர் உயர்ந்த புஷ்டி மருந்தின் வேலையைச் செய்கிறது. லகுவான தன்மையின் மிருதுவான உணர்ச்சியை உங்களுக்கு அளிக்கிறது. 'க்ருஷன்' தன் அளவில்லாத வகையில் வாழ்க்கையின் சோர்விலிருந்து உயிரின் சுறுசுறுப்பைப் பெற 'ஆரோக்கியத்தை அளிக்கிறதென லக்ஷக்கணக்கான மக்கள் அறிவார்கள்.

இன்றே 'க்ருஷன்' வாங்குங்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும். விலை ரூ. 1-10. (மரு சன் பெட்டியில்)

## நீங்கள் கூட அந்த 'க்ருஷன்' உணர்ச்சியை அடையலாம்



# சென்னை பாரகன் & பிராட்வேயில்

ஜனவரி 14உ முதல்

## உயர்ந்த நீதிகள் கொண்ட உன்னதச் சித்திரம்

**சின்னப்பா**
**ராஜகுமாரி**
நடித்த



# கிருஷ்ண பக்தி

EP.

டைரக்ஷன்
**R.S.மணி**

ஸ்டூடியோ
நியூடோன்

தென்னிந்தியாவில் பல முக்கிய
நகரங்களில் வெற்றிகரமாக நடைபெறுகிறது.

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

சென்னை நகர உரிமைகள்: ஸ்ரீ சந்திரா பிக்சர்ஸ், 83, பூந்தமல்லி ஹைரோட், மதராஸ் - 10
திருவாங்கூருக்கு: தி பிலிம் டிஸ்ட்ரிப்யூடிங் கம்பெனி, எர்ணாகுளம்
கொச்சின் மலபாருக்கு: அசோஸியேடட் பிக்சர்ஸ் லிமிடெட், எர்ணாகுளம்
மைசூர் பிராந்தியத்திற்கு: ஸ்ரீ எஸ். எஸ். அய்யர், சாரதா பிலிம்ஸ், 174, காந்தி நகர், பெங்களூர் - 2
கோயமுத்தூர் நீலகிரிக்கு: கோயமுத்தூர் பிக்சர்ஸ் லிமிடெட், கோயமுத்தூர்

தென் ஆற்காடு, வட ஆற்காடு, செங்கற்பட்டு, சித்தூர் ஆகிய ஜில்லாக்களுக்கு:
ஸ்ரீ எ. கிருஷ்ணஸ்வாமி, பிலிம் டிஸ்ட்ரிப்யூட்டர், 14, பெங்களூர் ரோடு, வேலூர்
இலங்கைக்கு: வெலிங்டன் டாக்கி சர்க்யூட், 117, புது செட்டி வீதி, கொழும்பு
சேலத்திற்கு: அசோகா பிக்சர்ஸ், குகை, சேலம்
ஆந்திரா ஸ்டேட் ஜில்லாக்களுக்கும், ஹைதராபாத் சமஸ்தானத்திற்கும்: சரஸ்வதி டாக்கீஸ் லிமிடெட், விஜயவாடா
திருச்சி, தஞ்சாவூர் ஜில்லாக்களுக்கு: முத்து மாணிக்கம் கம்பெனி, சிதம்பரம்

# விகாரமான வேக்காடு மறைகிறது

## கிட்டத்தட்ட புத்திக் கோளாறுதான்!



"சில மாதங்களுக்கு முன் சரும வேக்காட்டினால் மிகவும் அவஸ்தைப் பட்டேன். அதுவும் இரவு நேரத்தில் படுத்திருக்கும்போது பைத்தியம் பிடித்ததுபோலவே இருந்தது. உங்களது விசித்திர தயாரிப்பாகிய வெல்டர்மாவுக்குப் பெரிதும் நன்றி செலுத்த வேண்டுமென்று நான் மனப்பூர்வமாகக் கூறுவேன். வெல்டர்மாவை சில தடவைகள் உபயோகித்த பிறகுதான் வெந்த சருமம் பூரணமாக சொஸ்த மடைந்தது. அநேக இதர மருந்துகளை உபயோகித்தேன். ஆனால் வெல்டர்மாவுக்கு இணை வேறெதுவும் கிடையாது என்பதே என் உறுதி. எனக்குப் பிடித்தமருந்து அதுதான்." —மிஸ். F. D. ஏந்ரக்

### இருவித கிருமி நாசன வேலை

சருமத்தின்மேல் முதல் தடவையாகப் பட்டவுடனேயே வெல்டர்மாவின் இருவித கிருமி நாசன சக்திகளும் வேலை செய்யத் தொடங்குகின்றன. அநேக சரும ரோகங்களுக்கு ஆஸ்பதமான பல்வேறு ரக கிருமிகளை இருமடங்கு வேகத்தில் கொன்று நாசமாக்குகின்றன. அதிலுள்ள கிருமி நாசன சக்திகள் இரண்டும் பல்வேறுவித விஷக் கிருமிகளுக்கு இரண்டு சத்துருக்களாகும்.

### சருமத்தினூடே செய்யும் வேலை

எரிச்சல் அடங்குகிறது. நமைச்சலும் வேக்காடும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுகின்றன. சருமம் சுத்தமாகவும் சுகமாகவும் ஆகிவிடுகிறது. எக்ஸிமா, கொப்புளங்கள், வேக்காடுகள், பருக்கள், மற்றும் சருமத்திற்கு அடியில் ஏற்படும் இதர ரோகங்களெல்லாம் சொஸ்தமாகின்றன. ஏனெனில், வெல்டர்மா சருமத்தினூடே சென்று ரோகத்திற்கு மூலாதாரமான இடத்திலேயே தாக்குகிறது.

நீரில் - எண்ணெய் - சேர்க்கையெனும் அடிப்படையில் தயாரிக்கப் பட்டிருப்பதால் நோய்ப்பட்ட இடத்திலுள்ள விஷத்தை வடிகட்டி வெளியேற்றுகிறது வெல்டர்மா. ஆகையால் மீண்டும் நோய் தொத்தி விடாமல் பாதுகாப்பளிக்கிறது. வழுவழுப்பான வெல்டர்மா பிசுக்கற்றது. கறை படாது, உபயோகித்த இடம் புலனாகாது. ஆகையால் எந்த இடத்திலும் எந்த நேரத்திலும் உபயோகிக்கலாம். எல்லா சிறந்த கெமிஸ்டுகளிடமும், டீலர்களிடமும் கிடைக்கும்.

இந்தியாவின் பூரண விநியோகஸ்தர்கள்
ஜியாப்ரே மானர்ஸ் அண் கோ., லிமிடெட்
பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC
**Valderma**
THE *Non-Greasy* BALM

# விற்பனைக்குத் தயார்!

# புதிய விக்டோரியா

**IV - D மாடல்**





**IV-D மாடல் புரொஜக்டர்கள் 5000 அடி மாகஸின் கொண்டவை. ½ H. P. மோட்டார், ஹை இன்டென்ஸிடி ஆர்க், நூதன C.50 ஆம்ப்ளிபயர் 14 அங்குல ஸ்பீகர் உள்பட**

இதர மாடல்கள் :

விக்டோரியா

**VI-B, IV-B, IV-C**



**இந்தியா, பாகிஸ்தான், பர்மா, சிலோன், சோல் ஏஜண்டுகள் :**

## படேல் பிரதர்ஸ், பம்பாய்

தெற்கு பிரதேச விநியோகம் :

## என். நாராயணன்,

*180, அண்ணா பிள்ளை தெரு, சென்னை-1*

# கல்கி
## பொருளடக்கம்


மலர் 8
இதழ் 25

ஜனவரி 16

சர்வதாரி ௵ தை 3




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.



மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 25

# என்ன செய்தி?

## வாழ்த்துகிறோம்

பல ஆண்டுகளுக்குப் பிறகு காங்கிரஸ் காரியக் கமிட்டியில் தமிழ் நாட்டுக்கு ஸ்தானம் கிடைத்திருக்கிறது. டாக்டர் பட்டாபி சீதாராமய்யா அமைத்துள்ள காரியக் கமிட்டியில் ஸ்ரீ காமராஜ் இடம் பெற்றிருக்கிறார். இதில் வியப்பு ஒன்றுமில்லை. ஸ்ரீ காமராஜைக் காரியக் கமிட்டியில் சேர்த்துக் கொள்ளாமலிருந்தால்தான் வியப்பாக இருந்திருக்கும். காங்கிரஸ் அக்கிராசனர் தேர்தலில் ஆந்திர நாட்டில் டாக்டர் பட்டாபிக்குக் கிடைத்த வோட்டுகளை விடத் தமிழ் நாட்டில் அதிகம் கிடைத்தன என்பதை நாம் மறக்க முடியுமா? அல்லது டாக்டர் பட்டாபிதான் மறக்க முடியுமா? காரியக் கமிட்டியில் தமிழ் நாட்டின் சார்பாக ஸ்தானம் பெற்றதன் பொருட்டு ஸ்ரீ காமராஜுக்கு வாழ்த்துக் கூறுகிறோம். மாகாண மந்திரி சபையிலே ஸ்தானம் பெறுவதைக் காட்டிலும் காரியக் கமிட்டி அங்கத்தினராவது முக்கியமானதாகும். இதை நமது (மாஜி) ரீவின்யூ மந்திரி ஸ்ரீ காளா வெங்கட்ராவ் நிரூபித்திருக்கிறார். சென்னை மந்திரி சபையில் ஸ்தானத்தை விட்டு விட்டுக் காங்கிரஸ் மகாசபையின் காரியதரிசிப் பதவியைப் பெற்றிருக்கிறார். இதனால் தம்மை உயர்த்திக் கொண்டதோடல்லாமல், காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பெருமையையும் உயர்த்தியிருக்கிறார். நெடுநாளைய தேச பக்தரும் சிறந்த காங்கிரஸ் தொண்டருமான ஸ்ரீ காளா வெங்கட்ராவ் அவர்களைப் பாராட்டி மகிழ்கிறோம்.

## வருந்துகிறோம்

சென்னை "இந்தியன் ரெவ்யூ" பத்திரிகையின் ஆசிரியரும் ஆங்கிலத்தில் பல பல அருமையான தேசிய வெளியீடுகளின் பிரசுரகர்த்தாவுமான ஸ்ரீ ஜி. ஏ. நடேசன் காலமானதைக் குறித்துத் துயருறுகிறோம். இந்திய தேசியத் தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகளை எவரும் எளிதில் அறிந்து கொள்ளுமாறு சிறு சிறு புத்தகங்களாக வெளியிடுவதற்கு முதன் முதலாக வழி காட்டியவர் ஸ்ரீ நடேசன் அவர்கள்தான். அவரது பிரசுரங்கள் எல்லாம் பிரிட்டிஷ் கண்காட்சியில் (மியூஸியம்) வைக்கப்பட்டிருக்கின்றன என்பதிலிருந்தே அவற்றின் சிறப்பைத் தெரிந்து கொள்ளலாம். மகாத்மா காந்தி, மகாகனம் சாஸ்திரி, ராஜாஜி முதலிய பல தேசத் தலைவர்களின் நட்பைப் பெற்ற பாக்கியசாலி. சென்னை ஷெரீப் பதவி போன்ற பல ஸ்தானங்களை வகித்துத் தொண்டு புரிந்தவர். ஸ்ரீ நடேசன் அவர்களின் நண்பர்களுக்கும் உறவினருக்கும் நமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சென்ற இருபத்தைந்து வருஷங்களாகப் பிரபல "பம்பாய் கிரானிகிள்" பத்திரிகையின் ஆசிரியராய் இருந்துவந்த ஸையது அப்துல்லா பிரெல்வி காலமானது இந்தியப் பத்திரிகை உலகத்துக்கே ஒரு பெரும் நஷ்டமாகும். இந்தியாவில் ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாடுபட்ட ஒரு சில தேசிய முஸ்லிம்களுள் ஸ்ரீ பிரெல்வியும் ஒருவர். அகில இந்தியப் பத்திராசிரியர்கள் மகாநாட்டின் தலைவராக இருந்து அவர் செய்த தொண்டை யாரும் மறக்க முடியாது. மற்றும் அவர் தேசியப் போராட்டங்களிலும் பங்கெடுத்துப் பலமுறை சிறை சென்றார். நெருக்கடியான சமயங்களில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியிலும், காரியக் கமிட்டியிலும் அங்கம் வகித்துத் தேசத்தின் கட்டளைகளைச் சிரமேற் கொண்டு நடந்து வந்தார். வகுப்பு வெறியை எதிர்த்துப் போராடுவதற்காகத் தமது வாழ்க்கையை அர்ப்பணம் செய்த முஸ்லிம் தலைவர்களில் அவரும் ஒருவர். அத்தகைய தலைவர் நம் தேசத்தில் ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமை நிலை நிறுத்தப்பட்டு வரும் இச்சமயத்தில் நம்மை விட்டுப் பிரிந்தது குறித்து வருந்துகிறோம்.

# இது என்ன கனவா ?




இந்தோனேஷ்யப் பிரச்னையை யொட்டிப் பண்டித ஜவஹர்லால் நேரு ஆசிய நாடுகளின் மகாநாட்டைக் கூட்ட உத்தேசித்திருப்பது ஐரோப்பிய அமெரிக்க வல்லரசுகளுக்குக் கிலியை உண்டு பண்ணியிருக்கிறது

# முகத்தின் மீது கோபம்!

1946-ம் வருஷம் பிரிட்டிஷார் ஒரு மகா மந்திரத்தைக் கண்டு பிடித்தார்கள்!

சென்ற உலக யுத்தம் முடிந்த பின் மற்ற நாடுகளைப் போன்று பிரிட்டனின் பொருளாதார நிலையும் படுமோசமாக இருந்தது. உணவு, உடை முதல் செருப்பு, சிகரெட் வரையில் மனிதர் உபயோகிக்கும் சகல முக்கியப் பொருள்களும் ரேஷனின் மூலம்தான் பிரிட்டிஷ் ஜனங்களுக்குக் கிடைத்தன.

பிரிட்டன் அதோகதியாகி விட்டது என்றும், பொருளாதாரத் துறையில் இனி பிரிட்டன் முன்னேறுவதோ, சுபிட்சம் அடைவதோ இந்த ஜன்மத்தில் இல்லை என்றும் பலர் முடிவு கட்டினர்.

அமெரிக்காவிடம் கடன் வாங்கிப் பிழைக்க வேண்டிய நிர்ப்பந்தமும் பிரிட்டிஷாருக்கு ஏற்பட்டது.

ஆனால், அதிசயமாக மேற்படி கஷ்டங்களை யெல்லாம் பிரிட்டன் இரண்டே வருஷங்களில் கடந்து விட்டதுதான் ஆச்சரியமாகும்.

அந்தக் கஷ்டங்களை யெல்லாம் கடப்பதற்குப் பிரிட்டனுக்கு ஒரு மந்திரம் உதவியாக இருந்தது.

"குறைவாகச் சாப்பிடுங்கள், அதிகமாக உழையுங்கள்!" என்ற மந்திரத்தை பிரிட்டிஷ் சர்க்கார் ஜனங்களுக்கும், குறிப்பாகத் தொழிலாளருக்கும் உபதேசித்து வந்தார்கள்.

ஜனங்களுக்கு முழு வயிறு உணவும் தேகம் நிறைய உடையும் அளிக்கக் கடமைப்பட்டுள்ள சர்க்கார் மேற்கூறிய விதம் சொன்னால் கோபம் வராமல் இருக்குமா?

ஆனால், பிரிட்டிஷ் ஜனங்களும் தொழிலாளரும் கோபித்துக் கொள்ளவில்லை. "தொழிற்கட்சி சர்க்காராக இருந்தும் நீங்கள் முதலாளி மனப்பான்மை கொண்டு விட்டீர்களே!" என்று யாரும் பிரிட்டிஷ் சர்க்காரைக் கண்டிக்கவில்லை.

"இது என்ன அநியாயம்? தொழிலாளர்மீது சிறிதும் இரக்கமின்றி நடந்து கொள்ளும் சர்க்காருக்குப் புத்தி கற்பிப்பதற்காக வேலை நிறுத்தம் செய்யுங்கள்!" என்று தொழிலாளர் தலைவர் எவரும் அவர்களுக்குத் தூபம் போடவில்லை.

பிரிட்டிஷ் தொழிற்கட்சி சர்க்காரின் பரம விரோதிகளான கன்சர்வேடிவ் கட்சியினர் கூட, மேற்படி நிலைமையைத் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொண்டு தங்களுடைய செல்வாக்கை உயர்த்திக் கொள்ளவோ, சர்க்காரை வீழ்த்தவோ முற்படவில்லை.

"எங்கள் இஷ்டப்படி உணவுப் பொருள்கள் வேண்டும்" என்று ஜனங்கள் வற்புறுத்தியிருந்தாலும், "எங்கள இஷ்டப்படி சம்பள உயர்வு வேண்டும்" என்று தொழிலாளர் வற்புறுத்தியிருந்தாலும் அமெரிக்காவிடமிருந்து பிரிட்டன் பெற்ற கடன் தொகை அந்த இனங்களில் கரைந்து உருத்தெரியாமல் போயிருக்கும்.

ஆனால், தேசபக்தியுள்ள பிரிட்டிஷ் ஜனங்களும் தொழிலாளரும் சர்க்காரின் கஷ்ட நஷ்டம், தேச மக்களின் கஷ்ட நஷ்டமே என்பதை உணர்ந்து நடந்து கொண்டதால், அந்தக் கடன் தொகையை ஆக்க வேலைகளில்,— சாதனங்களின் உற்பத்தியைப் பெருக்குவதில் உபயோகிப்பது பிரிட்டனுக்குச் சாத்தியமாயிற்று.

சர்க்கார் நிர்வாகிகள், தொழில் நிபுணர்கள், முதலாளிகள், தொழிலாளிகள் எல்லோரும் தேசத்தின் நெருக்கடியான நிலையை உணர்ந்து ஒத்துழைத்ததால், பிரிட்டனின் பொருளாதார நிலை ஆச்சரியகரமாக அபிவிருத்தி யடைந்து, மகத்தான பொருளாதாரச் சிக்கலிலிருந்து அந்தத் தேசம் விடுதலை பெற்றிருக்கிறது.

கால நிலை திருப்திகரமாக இராமலிருந்தும் கூட பிரிட்டனில் விவசாயப் பொருள்களின் உற்பத்தி யுத்தத்துக்கு முன் இருந்ததைக் காட்டிலும் இருபத்தைந்து சத விகிதம் அதிகமாகி யிருக்கிறது; கைத்தொழில் சாதனங்களின் உற்பத்தி இருபது சத விகிதம் உயர்ந்திருக்கிறது; ஏற்றுமதி முப்பத்து நாலு சத விகிதம் அதிகமாகி யிருக்கிறது.

பிரிட்டிஷ் சர்க்காரின் ஆதார பூர்வமான அறிக்கையிலிருந்தே மேற்படி புள்ளி விவரங்கள் தெரியவருகின்றன.

ஆனால் சுதந்திர இந்தியாவில் நிலைமை எப்படி இருக்கிறது?

விவசாயமும் கைத்தொழில்களும் மேலும் க்ஷீணித்து வருகின்றன. அவற்றை அபிவிருத்தி செய்வதற்கு இயந்திர சாதனங்கள் தேவையாக இருக்கின்றன. அந்தச் சாதனங்களை வாங்குவதற்கு இன்றியமையாத ஸ்டர்லிங், டாலர் இருப்புகளை இந்திய சர்க்கார் வெளி நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களைத் தருவிப்பதில் செலவழித்து விட்டு, இப்போது உலக பாங்கியில் கடன் வாங்க ஏற்பாடு செய்து வருகிறார்கள்.

இந்நிலையில் தொழிலாளர் தலைவர்களும் வக்கரித்துக் கொள்வதைத் தேசத்தின் எதிர்கால க்ஷேமத்தில் கருத்துக்கொண்ட யார்தான் ஆதரிக்க முடியும்?

இந்திய சர்க்கார் தொழில் மந்திரி ஸ்ரீ ஜகஜீவன்ராம் சில தினங்களுக்கு முன் லக்ஷ்மணபுரியில் பேசியபோது, தொழிலாளருக்கு வாழ்த்துக் கூறினார். எதற்காகத் தெரியுமா?

"1947-ம் வருஷத்தில் மொத்தம் இருபது லட்சம் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்ததன் விளைவாக ஒன்றரைக் கோடி வேலை நாட்களை இழந்தோம். ஆனால் 1948-ல் பத்து லட்சம் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்ததன் விளைவாக எழுபது லட்சம் வேலை நாட்களைத்தான் இழந்தோம்" என்று தொழில் மந்திரி சந்தோஷப்பட்டார்!

இந்தியாவில் அன்னியரின் ஆதிக்கத்தை எதிர்த்து எத்தனையோ ஆண்டுகளாகச் சுதந்திரப் போர் நடந்து வந்திருப்பதால், அன்னியரின் ஆதிக்கம் ஒழிந்து சுதந்திரம் ஏற்பட்ட பின்னரும் கூட இன்னும் பலர் போராட்ட மனப்பான்மையை விட்டபாடில்லை. பிரிட்டிஷ் சர்க்காரைக் கண்டித்ததுபோல் சுதந்திர இந்திய சர்க்காரையும் கண்டிக்கிறார்கள்.

அதிலும் தொழிலாளர் தலைவர்கள் இந்திய சர்க்காரை முதலாளி சர்க்கார் என்றும், தொழிலாளர்களிடம் அனுதாபம் இல்லாதவர்கள் என்றும் கூறுவதைக் காட்டிலும் அபாண்டமான பழிச்சொல் வேறு எதுவுமே இருக்க முடியாது.

இன்று இந்திய சர்க்காரின் நிர்வாக பீடத்தில் வீற்றிருக்கும் தலைவர்கள் ஒவ்வொருவரும் மனம் வைத்திருந்தால் குன்றாத நிதி படைத்த குபேரர்களாக இருப்பார்கள். ஏழைத் தொழிலாளரிடம் அவர்களுக்கு இரக்கம் இல்லை என்றால், அவர்கள் ஏன் அரசியல் துறவிகளாகி இருக்க வேண்டும்? பட்டுப் பீதாம்பரம் உடுத்தி மாட மாளிகைகளில் செல்வத்தில் புரண்டு சுக வாழ்க்கை நடத்த வேண்டிய அவர்கள் எதற்காகப் பல ஆண்டுகளாகச் சிறை வாழ்க்கையை வலுவில் வரவேற்றுத் துன்பப்பட வேண்டும்?

எனவே, சர்க்காரைக் கண்டிக்கும் மனப்பான்மை பலருக்கும் ஒழிய வேண்டியது எவ்வளவு அவசியமோ, அதுபோலவே தொழிலாளருக்கும் வேலை நிறுத்த மனப்பான்மை ஒழிய வேண்டியது அத்தியாவசியம்.

* * *

இப்போது ரயில்வே தொழிலாளர், வேலை நிறுத்தம் செய்வதா வேண்டாமா என்பதை நிர்ணயிப்பதற்காகச் சீட்டுப் போட்டுப் பார்த்து வருவது மிகவும் கண்டிக்கத் தக்கது.

முதலாவதாக, இந்திய சர்க்கார் தலைவர்களைக் காட்டிலும் தங்களுக்குச் சிறந்த நண்பர்கள் கிடைக்க மாட்டார்கள் என்பதை மேற்படி தொழிலாளர் உணர்ந்து கொள்ள வேண்டும்.

இதற்கு முன் இந்திய ரயில்வேக்களுக்கும் பொது ஜனங்களுக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. எனவே, பிரிட்டிஷ் சர்க்காருக்கு விரோதமாக வேலை நிறுத்தமும் ஒரு கருவியாக உபயோகிக்கப்பட்டு வந்தது.

ஆனால், இன்றோ சர்க்கார் ஜனங்களுடையது; ரயில்வேக்களும் ஜனங்களுடைய சொத்து; தனிப்பட்ட முதலாளிகளின் சொத்து அல்ல. எனவே, இன்றைய நிலையில் வேலை நிறுத்தம் செய்வது முகத்தின் மீது கோபம் கொண்டு மூக்கை வெட்டிக் கொள்வதற்கு ஒப்பாக முடியும்.

தற்போது அவர்கள் வேலை நிறுத்தம் செய்வதைப் பொது ஜனங்கள் ஒப்புக் கொள்ளவே மாட்டார்கள்.

வேலை நிறுத்தம் நடந்தால் எத்தனை ஜனங்கள் பட்டினி கிடக்க நேரும் என்பதை ரயில்வேத் தொழிலாளர் கவனிக்க வேண்டும்.

ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு அவசரம் அவசரமாக உணவுப் பொருள்களும் இதர சாதனங்களும் செல்ல வேண்டியிருக்கும் இச்சமயத்தில், தொழிலாளரிடையே வேலை நிறுத்தம் என்ற பேச்சே எழுவது கூடாது.

தொழிலாளர் தலைவருக்கும் ரயில்வே மந்திரிக்கும் சமரசப் பேச்சு வார்த்தைகள் நடந்து வருகின்றன. அந்தப் பேச்சு வார்த்தைகள் ஒருவிதமாக முடியும் வரையிலாவது சீட்டுப் போடும் காரியத்தை ஒத்திவைக்கலாம். அவ்வாறு ஒத்தி வைப்பதால் தொழிலாளரின் நலனுக்கு எவ்விதப் பாதகமும் ஏற்பட்டு விடாது.

அப்படியிருந்தும் கூட, தொழிலாளருக்கு அவ்விதம் நல்ல யோசனை கூறுவதற்குற்ற தலைவர் இராதது மிகவும் வருந்தத் தக்கது.

“ரயில்வேத் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தால், கஷ்ட நஷ்டங்கள் அடைவோர் ஏழைகளேயன்றிப் பணக்காரர் அல்ல. அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்று ஆசை கொண்டே சிலர் தொழிலாளரை வேலை நிறுத்தம் செய்யுமாறு தூண்டி வருகிறார்கள். அத்தகையோர் ஜனநாயக முறைப்படி போராடித் தேர்தல்களில் வெற்றி பெற்று சர்க்காரைக் கைப்பற்றட்டும். சுதந்திரம் பெற்றதும் பெறாததுமாக இந்தியாவுக்கு ஏற்பட்ட சோதனைக் காலத்தில் தொழிலாளர் தங்களுடைய கடமையைச் செய்யத் தவறி விட்டார்கள் என்று எதிர்கால சரித்திராசிரியர்கள் கூறும்படி செய்து விடாதீர்கள்” என்று இந்திய சர்க்கார் தொழில் மந்திரி கேட்டுக் கொண்டிருக்கிறார்.

எனவே, இந்தச் சோதனைக் காலத்தில் ரயில்வே தொழிலாளர் என்ன செய்யப் போகின்றனர் என்பதைப் பொறுத்திருந்து பார்க்கலாம்.

---

# பொங்கலோ, பொங்கல்!

“பொழுதெப்போ விடியும்? பூ எப்போ மலரும்?”

என்று தமிழ்நாட்டுத் தங்கைமார்களும் குழந்தைகளும் பொங்கலுக்கு முதல் நாள் இரவு கதிரவன் உதயத்துக்காகத் தவங்கிடக்கிறார்கள்.

ஆம்; பொழுது விடிந்து சூரியனின் பொன்னிறக் கிரணங்கள் பட்டால்தான் பூக்கள் மலருகின்றன. வண்டுகள் ரீங்காரம் செய்து இன்னிசை பரப்ப ஆரம்பிக்கின்றன. பறவைக் கணங்களும் ‘கீச் மூச்’ என்று தம் இன்மொழிகளில் ஒன்றுடன் ஒன்று கொஞ்சிக் குலாவிக் கொண்டு வானவீதியிலே பறக்க ஆரம்பிக்கின்றன.

கழனியும் செந்நெல்லும் கரும்பும் கனி வகைகளும் சூரிய கிரணங்களின் ஸ்பரிசத்தினால் பூரித்து விளைகின்றன.

இந்தக் காட்சியை யெல்லாம் கண்டு மக்கள் குதூகலமடைந்து விழாக் கொண்டாடுகிறார்கள்.




குழந்தைகளும் குழந்தை உள்ளம் பெற்ற கவிஞர்களும் வாயு வேகங்கொண்ட மாயக் குதிரைகள் பூட்டிய பொன் ரதத்தில் ஏறி சூரிய பகவான் வானவெளியில் உலாவி வருவதாகக் கற்பனை செய்து மகிழ்கிறார்கள்.

எவன் உள்ளத்தில் மகிழ்ச்சி பொங்குகிறதோ அவன் தான் பிறருக்கும் மகிழ்ச்சி யூட்ட முடியும் என்பது பெரியோர் வாக்கு. அதனால் தன் வருகையினாலேயே அகில உலகத்துக்கும் மகிழ்ச்சியூட்டும் ஆதித்தனைக் கவிச் சக்கரவர்த்தி கம்பர் ஆனந்தக் கூத்தாடும் நடராஜப் பெருமானுடன் ஒப்பிட்டார்.

கீழ்த்திசைக் கடலில் சூரியோதயமாவதைக் கம்பர் பின்வருமாறு வர்ணிக்கிறார்:

கின்னரர்கள் இனிய கீதம் பாடுகிறார்கள். உலகத்தவர் ஆங்காங்கு நின்று உச்சிமீது கரங்குவித்துத் துதிக்கிறார்கள். சமுத்திரகோஷம் பிரம்மாண்டமான மத்தளம் முழங்குவது போலிருக்கிறது. அந்தத் தாளத்திற்கு ஏற்ப நடனம் புரிந்த வண்ணம் சூரியன் உதிக்கிறான். ஆனந்தக் கூத்தாடும் பெருமானின் விரிந்த செஞ்சடைபோல் சூரியனின் செங்கதிர்க் கிரணங்களும் உலகம் முழுதும் வியாபிக்கின்றன!

இவ்வாறு ஆயிர வருஷங்களுக்கு முன் சூரியனுக்குக் கவிஞர் போற்றி கூறினார். தமிழர்கள் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாகத் தைத்திங்களன்று விழாக்கொண்டாடி வருகிறார்கள்!

சூரியன் இல்லை என்றால் மழையில்லை; நன்செய்ப் பயிரும் புன்செய்ப் பயிரும் விளையாது. ஆதலின், சூரியபகவானே மக்களுக்குக் கண்கண்ட தெய்வம்!

சூரிய பகவானருளால் கிடைத்த புத்தரிசியைப் புதுப்பானையிலிட்டு, வீட்டுக்குடையவன் சூரியனுக்குப் பொங்கலிட்டு வணங்குகிறான். பொற்கதிரை யொத்த நெற்கதிரையும் கரும்பையும் கனிகாய் வகைகளையும் வைத்துப் படைக்கிறான். குழந்தையின் ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. அந்தக் காட்சியை நமது சித்திரக்காரர் வரைந்திருக்கிறார்!

பொங்கல் இன்று பொங்கல்! புதுவருஷப் பொங்கல்!
மங்கலங்கள் பொங்க மகிழ்விடும் பொங்கல்!



# சுதந்திர மாவிளக்கு

ஜெயமணி



## 1 பிறநாட்டு அரசியல் திட்டங்கள்

**ஸ்ரீ** ராமகிருஷ்ண பரம ஹம்ஸரிடமிருந்து உபதேசம் பெற்ற விவேகானந்தர் சர்வ தேச மேடையில் ஏறி, ஹிந்து மதத்தின் தனிச்சிறப்பையும் ஹிந்து தர்மத்தின் அருமை பெருமைகளையும் உலக மக்கள் கண்டு பிரமிக்கும்படி செய்வதில் வெற்றி பெற்றார்.

அதுபோலவே சமீபத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு காந்தி மகானால் உபதேசிக்கப்பட்ட சாத்வீகத்தின் சிறப்பை உலகப் பிரதிநிதிகள் அடங்கிய மகாசபையில் எடுத்துக் கூறி, மாநிலம் புகழ இந்தியாவின் மாண்பு உயரும்படி செய்தார்.

பண்டித மோதிலால் நேரு தாம் இறக்கும் தறுவாயில் தம்முடைய அருந்தவப் புதல்வரான பண்டித ஜவாஹர்லால் நேருவுக்குப் புத்திமதியாக ஒரு வார்த்தை கூறினாராம். "உன் அரசியல் கொள்கை எப்படியாயினும், நீ எக்காலத்திலும் காந்திஜியின் நட்பையும் நல்லெண்ணத்தையும் மாத்திரம் இழந்துவிடக் கூடாது" என்பதுதான் பண்டித மோதிலால் கூறிய புத்திமதி. தந்தை கூறிய புத்திமதியை தனயன் அணுவளவும் வழுவாது நிறைவேற்றினார்.

எந்தப் பிரச்னையை யொட்டியும் பண்டித ஜவாஹர்லால் நேருவைத் திருப்தி செய்தாலன்றி மகாத்மா காந்திக்கு மன நிம்மதி ஏற்படுவதில்லை என்பது, ஜவாஹர்லால்ஜியின் சுய சரிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பல சம்பவங்களிலிருந்தும் தெரிகிறது. "சிற்சில விஷயங்களை யொட்டி காந்திஜியின் முறை என் அறிவுக்கு ஒவ்வாவிடினும் அவருடைய தெய்வீகத் தன்மையிலும் தீர்க்கதரிசனத்திலும் எனக்கு எல்லையற்ற நம்பிக்கை உண்டு. அவர் ஆத்மீக சக்தி நிறைந்த ஒரு களஞ்சியம். இந்த உலகத்தின் சர்ச்சைக்கு அகப்படாத ஒரு புதிர்" என்று பண்டித நேரு தமது சுய சரிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

ஸ்வாமி விவேகானந்தரிடத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு வேறு எவரிடத்திலும் இராத தனி அபிமானம் இருந்தது போலவே, பண்டித நேருவிடத்திலும் காந்தி மகானுக்குத் தனிப்பட்ட அபிமானம் இருந்து வந்தது. குறிப்பிட்ட வருஷங்களில் ராஷ்டிரபதி கிரீடத்தைத் தரிக்கத் தகுதி யுடையவர் ஜவாஹர்லால்ஜிதான் என்று காந்திஜீ கூறிய சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவங்களை யாரும் மறந்திருக்க முடியாது. ஜவாஹர்லால்ஜியின் நேர்மை, ஒழுக்கம், அந்தரங்க சுத்தி, தியாக புத்தி, அரசியல் ஞானம், அஞ்சா நெஞ்சம் முதலிய அபூர்வ குணங்களே காந்தி மகானின் மனதை எவ்வளவு தூரம் கவர்ந்தன.

அரசியல் விஷயங்களில் அவருடைய மேதையைப் பல வருஷங்களுக்கு முன்பே காந்திஜீ பெரிதும் போற்றியிருக்கிறார். 1939-ம் வருஷம் நவம்பர் மாதம் 25-ந் தேதி "ஹரிஜன்" இதழில் காந்திஜீ எழுதிய சில விவரங்களே அதற்குச் சான்றாகும்.

"ஜவாஹர்லால் பிறவியிலேயே ஒரு ஜனநாயகவாதி. நான் பற்பல அரசியல் விஷயங்களையும் பரிசீலனை செய்ய முற்பட்டிருப்பதற்கு அவர்தான் காரணஸ்தர். அவற்றில் அரசியல் நிர்ணய சபைப் பிரச்னையும் ஒன்று. அவ்விஷயமாய்க் காங்கிரஸில் முதன்முதலாக நேரு தீர்மானம் கொண்டு வந்த போது, யாதொரு பரிசீலனையும் செய்யாமலே அதை நான் ஆதரித்தேன். ஜனநாயக நுட்பங்களில் அவருக்குள்ள மேதையில் எனக்கு இருக்கும் நம்பிக்கையே அதற்குக் காரணமாகும். இருந்தாலும் அரசியல் நிர்ணய சபை முறையால் பலன் ஏற்படுமா என்று தயங்கிக் கொண்டே நான் அதை முதலில் ஒப்புக்கொண்டேன். ஆனால் அந்த முறையை நன்கு பரிசீலனை செய்த பிறகு அதில் ஜவாஹர்லாலைக் காட்டிலும் எனக்கு அதிக உற்சாகம் ஏற்பட்டிருக்கிறது. வகுப்பு

வேற்றுமைக்கும் இதர விபரீதங்களுக்கும் அரசியல் நிர்ணய சபைதான் பரிகாரம் என்றும், ஜனங்களின் அரசியல் கல்வி அபிவிருத்திக்கு அது ஒரு கருவியாக இருக்கும் என்றும் கருதுகிறேன். அரசியல் நிர்ணய சபையினால்தான் நம் தேசத்தின் சூழ்நிலைக்கு உற்ற அரசியல் திட்டத்தைத் தயாரிக்க முடியும். அத்தகைய அரசியல் திட்டம்தான் ஜனங்களின் அபிலாஷையைப் பூர்ணமாகவும் உண்மையாகவும் பிரதிபலிப்பதாக இருக்கும்" என்று காந்திஜி எழுதியிருந்தார்.

அரசியல் நிர்ணய சபையின் மூலம் இந்தியாவின் அரசியல் திட்டத்தைத் தயாரிக்க வேண்டும் என்று முதன் முதலாகக் கூறியவர் பண்டித ஜவாஹர்லால் நேருதான். அதன் பின் காந்திஜி முதல் சகல காங்கிரஸ் தலைவர்களும் அதையே வற்புறுத்திக் கூறி வந்தனர். எனவே, அரசியல் நிர்ணய மகா சபையைக் கூட்டியதன் மூலம் நமது தலைவர்கள் தங்களுடைய வாக்குறுதியை நிறைவேற்றி விட்டார்கள்.

இந்தியா சுதந்திரம் பெற்ற இரண்டே வருஷத்துக்குள் அந்த மகோன்னதமான சுதந்திரமாளிகைக்கு ஸ்திரமான அஸ்திவாரம் அமைக்கும் அரசியல் திட்டமும் உருவாகி விட்டது!

அமெரிக்கா, கனடா, அயர்லாந்து, பிரான்ஸ், ஸ்விட்ஜர்லாந்து போன்ற ஜனநாயக, குடியரசு நாடுகளின் திட்டங்களை அடிப்படையாகக் கொண்டே இந்திய அரசியல் திட்டமும் தயாரிக்கப்பெற்றிருக்கிறது. எனினும் மேற்படி நாடுகளின் அரசியல் அமைப்பில் வெகு கால அனுபவத்தின் பலனாகத் தெரிந்துள்ள தவறுகளும், குறைகளும் இந்திய அரசியல் திட்டத்தில் தவிர்க்கப்பட்டிருப்பது அந்தத் திட்டத்தின் தனிச் சிறப்பாகும்.

எனவே, இப்போது இந்திய அரசியல் நிர்ணய சபையில் உருவாகியுள்ள சுதந்திர இந்தியாவின் ஜனநாயகக் குடியரசுத் திட்டத்தை, உலகிலேயே சிறந்த அரசியல் சாஸனம் என்று கூறலாம்.

• • •

தற்போது தயாராகியிருக்கும் இந்திய அரசியல் திட்டத்தின் விதிகளை விவரிக்கு முன், மேலே குறிப்பிட்ட நாடுகள் எந்தெந்த அரசியல் முறையை அடிப்படையாகக் கொண்டது என்பதைக் கவனிப்போம்.

அமெரிக்கா பிரிட்டனின் கொடுங்கோன்மையை எதிர்த்து 1776-ம் ஆண்டு சுதந்திரப் பிரகடனம் செய்தது. எனினும் அதிலிருந்து பதினொரு வருஷங்களுக்குப் பிறகுதான் அமெரிக்காவின் அரசியல் திட்டம் உருவாகி. அது பூரணக் குடியரசாகியது. அமெரிக்க ஜனங்கள் தேர்ந்தெடுக்கும் பிரஸிடெண்டின் பதவி காலம் நாலு வருஷங்களாகும்.

அமெரிக்க சர்க்காரின் நிர்வாகம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. நிர்வாக அதிகாரம் அமெரிக்கா பிரஸிடெண்டுக்கும், சட்டங்கள் செய்யும் அதிகாரம் காங்கிரசுக்கும், நீதிவழங்கும் அதிகாரம் கோர்ட்டுகளுக்கும் அளிக்கப்பட்டிருக்கின்றன. செனேட் சபையினுடைய ஆலோசனையையும் சம்மதத்தையும் கேட்டு அமெரிக்கா பிரஸிடெண்டு நீதிபதிகளை நியமிப்பார். எனினும் அவர்களைப் பதவியிலிருந்து விலக்கும் அதிகாரம் யாருக்கும் இல்லை. நீதிபதி மீது குற்றம் சாட்டி, அவர் குற்றவாளி என்று செனேட் சபையினரில் மூன்றில் இரண்டு மடங்கு தொகையினர் தீர்மானித்தால்தான் அவரைப் பதவியிலிருந்து விலக்கலாம். அதே முறையைக் கொண்டுதான் பிரஸிடெண்டையும் விலக்க முடியும். எனவே, மேற்படி மூன்று பிரிவினருக்கும் ஒருவர் கடமையில் மற்றொருவர் அனுவசியமாகத் தலையிட முடியாது.

அமெரிக்கா பிரஸிடெண்டோ அல்லது காங்கிரஸோ சர்வாதிகாரமாக எதுவும் செய்யாமல் தடுக்கும் அதிகாரம் சுப்ரீம் கோர்ட்டுக்கு உண்டு. அமெரிக்க காங்கிரஸில் ஒரு சட்டம் நிறைவேறலாம். அதை உறுதிசெய்து பிரஸிடெண்டும் கையெழுத்திடலாம். எனினும் அது செல்லுபடியாகாது என்று முடிவுசெய்ய சுப்ரீம் கோர்ட்டுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

பிரிட்டனின் அரசியல் திட்டம் விசித்திரமானது. பிரிட்டிஷ் அரசியல் முறை பார்லிமெண்டுக்குப் பொறுப்பான முடியரசு என்றாலும், மற்ற நாடுகளைப் போல் ஜனப்பிரதிநிதிச் சபையின் மூலம் அரசியல் திட்டம் உருவாகவில்லை. பிரிட்டிஷ் அரசியல் திட்டம் பழைய சம்பிரதாயங்கள், பழக்க வழக்கங்கள், கோர்ட்டார் செய்த தீர்ப்புகள், மன்னர்கள் விடுத்த கட்டளைகள், பார்லிமெண்டில் நிறைவேறிய சட்டங்கள் முதலிய அம்சங்கள் சேர்ந்து உருவானது. பிரிட்டிஷ் அரசியல் திட்டம், அரசியல் நிர்ணய சபை கூடி ஏட்டில் எழுதப்படாத

தெனினும், இன்று அது எவ்விதப் புதுக் கொள்கைகளாலும் அசைக்க முடியாத பார்லிமெண்டு ஆட்சிக்கு உட்பட்ட முடியரசாக விளங்குவது பிரிட்டிஷாரின் மன உறுதிக்கும் பழமையில் அவர்களுக்குள்ள பற்றுதலுக்கும் சிறந்த உதாரணமாகும்.

மகத்தான போராட்டங்களுக்குப் பின் பிரஞ்சுக் குடியரசுத் திட்டம் 1875-ம் வருஷம் உருவாகியது. அதன்படி பிரஞ்சு பிரதிநிதிச் சபைகள் ஏழு வருஷங்களுக்கு ஒரு தடவை பிரஞ்சுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கின்றன. கொள்கையில் அடிப்படையான வேற்றுமையின்றி ஒவ்வொரு தலைவரும் ஒவ்வொரு கட்சியைச் சிருஷ்டிப்பதால் எவ்வளவு அனர்த்தம் உண்டாகும் என்பதற்கு இன்றைய பிரான்ஸே உதாரணமாகும். அங்கு பார்லிமெண்டில் பல பல கட்சிகள் இருப்பதால் நாள் கணக்கிலும் மாதக் கணக்கிலும் மந்திரி சபைகள் வீழ்ச்சி அடைவது சர்வ சகஜமாக இருக்கிறது.

அமெரிக்கா, பிரிட்டன் போன்ற நாடுகளின் அரசியல் திட்டங்களிலுள்ள சிறந்த அம்சங்கள் கனடா அரசியல் திட்டத்தில் அடங்கியிருக்கின்றன. அமெரிக்காவில் இருப்பது போல் கனடாவிலும் மாகாணங்களுக்குக் கவர்னர்கள், பிரதம மந்திரிகள் முதலியோர் உண்டு. சட்ட சபைகளும் உண்டு. மாகாணங்களுக்கு எல்லையற்ற அதிகாரங்கள் இருந்ததால், அமெரிக்கா ஆதியில் மிகுந்த குழப்பத்துக்கும் கஷ்ட நஷ்டங்களுக்கும் உள்ளாக வேண்டியிருந்தது. எனவே, கனடா அத்தகைய விபரீதத்துக்கு இடம் வைத்துக் கொள்ளாமல் முதலிலேயே மாகாணங்களின் அதிகாரங்கள் எல்லை மீறிப்போகாமல் அவற்றை வரையறுத்து விட்டது.

அயர்லாந்து சமீப காலம் வரையில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடாக இருந்து வந்ததெனினும், இப்போது அது பிரிட்டனுடன் சட்ட பூர்வமான எவ்விதத் தொடர்பும் இல்லாத குடியரசாக விளங்குகிறது. அயர்லாந்து தலைவரை ஜனங்கள் ஏழு வருஷத்துக்கு ஒரு தடவை தேர்ந்தெடுக்கிறார்கள். எனினும் பிரிட்டனில் மன்னருக்கு எவ்வளவு அதிகாரமோ, அதே அதிகாரம்தான் அயர்லாந்து பிரஸிடெண்டுக்கும் உண்டு. சட்டங்களில் கையெழுத்துப் போடுதல், பார்லிமெண்டைக் கூட்டுதல், மந்திரிகளின் சிபார்சுகளை அனுசரித்து உத்தியோகஸ்தர்களை நியமித்தல், இவை போன்ற சாதாரண அதிகாரங்கள்தான் பிரஸிடெண்டுக்கு உண்டு. அயர்லாந்தின் உண்மையான தலைவர்,—அதாவது அதிக அதிகாரங்கள் உள்ள தலைவர் பிரதம மந்திரிதான்.

மூர்த்தி சிறியதாயினும் கீர்த்தி பெரியது என்பார்கள் அல்லவா? ஸ்விட்ஜர்லாந்து விஷயத்தில் அது முற்றிலும் பொருத்தமாக இருக்கிறது. ஐரோப்பாவிலேயே ஸ்விட்ஜர்லாந்துதான் சிறியது. ஆனால் மிகவும் அழகான தேசம். அது ஆல்ப்ஸ் மலைப் பிரதேசத்தில் இருப்பதால், அங்கு கண்களைக் கவரும் வெண்மலைத் தொடர்களுக்கும், பசுமை மயமான பள்ளத்தாக்குகளுக்கும், வயல்களுக்கும், ஏரிகளுக்கும் குறைவில்லை. ஸ்விஸ் ஜனங்களுக்குத் தனி பாஷை இல்லை. ஜெர்மன், பிரஞ்சு, இத்தாலிய பாஷைகளையே கலந்து பேசி வருகிறார்கள். தங்களுடைய மூதாதையர் ஜெர்மானியரா, பிரஞ்சுக்காரரா அல்லது இத்தாலியரா என்றும் அவர்கள் கவலைப்படுவதில்லை. தங்களுடைய தேசம் ஸ்விட்ஜர்லாந்து என்பதுதான் அவர்களுக்கு மிக மிக முக்கியமாகும்.

மதமும் பாஷையும் வெவ்வேறாக உள்ள ஸ்விஸ் ஜனங்களிடையே நிலவி வரும் ஒற்றுமை மிகவும் அபூர்வமானது. அதனால் தான் அவர்கள் சென்ற சில நூற்றாண்டுகளாகத் தங்களைத் தாங்களே ஆண்டு வருவது சாத்தியமாயிற்று.

ஐரோப்பாவில் மூண்ட புரட்சிகள், போர்கள் காரணமாக ஓடிவந்து அடைக்கலம் புகுந்த அரசியல் தலைவர்களுக்கு ஸ்விட்ஜர்லாந்து சென்ற நூறு வருஷங்களுக்கு மேலாக அபயம் அளித்து வந்திருக்கிறது.

ஸ்விட்ஜர்லாந்து பல மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. மேல் சபை, கீழ் சபை இரண்டும் சேர்ந்ததே ஸ்விட்ஜர்லாந்து காங்கிரஸ் அல்லது பார்லிமெண்டு ஆகும். மேற்படி பார்லிமெண்டுதான் மந்திரி சபையைத் தேர்ந்தெடுக்கிறது. மந்திரி சபையைச் சேர்ந்த யாராவது ஒருவர் ஒவ்வொரு வருஷமும் அதன் தலைவராக அதாவது பிரதம மந்திரியாகத் தேர்ந்தெடுக்கப்படுவார். எனினும் மற்ற மந்திரிகளைக் காட்டிலும் பிரதம மந்திரிக்கு விசேஷ அதிகாரம் எதுவுமில்லை. ஸ்விஸ் மாகாணங்களில் மிகவும் முக்கியமான சட்டங்களைச் சட்டசபைகளின் மூலம் நிறைவேற்றுவதில்லை; பொதுஜன வாக்கு எடுத்து முடிவு செய்வது ஒரு விசேஷ அம்சமாகும்.

(தொடரும்)

# சிவலீலா

**பகீரதன்**

"ஆதியும் அந்தமுமில்லாத பரம் பொருளை வார்த்தைக்குள் அடக்கி இலக்கியமாகச் செய்திருக்கும் பெருமை இந்திய நாட்டுக்குத்தான் சொந்தமானது" என்று பிரஞ்சு தேசத்துப் பேரறிஞரான ரோமன் ரோலந்து நமது புராணங்களைப் பற்றிக் கூறியிருக்கிறார். இப்படி மேல்நாட்டு அறிஞர்கள் புகழும் புராணங்களில் ஒன்றான திருவிளையாடற்புராணம் சிவபெருமானின் அறுபத்துநாலு லீலைகளை எடுத்துக் காட்டுவதாகும். அதில் ஆறு லீலைகளான விறகு விற்ற படலம், தருமிக்குப் பொற்கிழி அளித்த படலம், சங்கம் தீர்த்த படலம், திருக்குறிப்புத் தொண்ட நாயனார், கல்யானை கரும்பு தின்ற படலம், சாபந் தீர்த்த படலம் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு ஒரே கதைபோல அழகாகத் தொகுத்திருக்கும் "சிவ லீலா" என்னும் நாடகத்தை டி. கே. எஸ். சகோதரர்கள் தற்சமயம் வால்டாக்ஸ் ரோடிலுள்ள ஒற்றைவாடைத் தியேட்டரில் நடத்தி வருகிறார்கள். மூன்று பாண்டிய மன்னர்களின் ஆட்சிக்காலச் சம்பவங்களை மூன்றே மணி நேரத்துக்குள் நாடகத்தில் நடத்திக் காட்டுகிறார்கள். மூன்று மணி நேரமும் நமது கண்ணையும் கருத்தையும் சிதறவிடாமல் நாடகம் நடத்துகிறார்கள் என்றால் எவ்வளவு தூரம் நாடகக் கலைப் பண்பைக் கையாண்டிருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டியதில்லை.

கைலயங்கிரியில் சிவபெருமான் திருக்கோலக் காட்சியிலிருந்து நாடகம் ஆரம்பமாகிறது. அதிலிருந்து நல்ல விறுவிறுப்புடன் காட்சிகள் தொடுகின்றன. கற்பனைக்கு எட்டாத காட்சி ஜோடனைகள். மதுரை சுந்தரேஸ்வரர் சன்னதி தத்ரூபம். இந்தக் காட்சியின் போது என் அருகில் உட்கார்ந்திருந்த ஒரு பெரியவர் பரவசமடைந்து தம்மையு மறியாமல், "அரகரா, மகாதேவா!" என்று கன்னத்தில் போட்டுக்கொண்டார்.



"என் கவியில் குற்றமா?"

வடநாட்டுச் சங்கீத வித்வான ஹேமநாதனின் மமதையை அடக்கிப் பாண்டிய நாட்டின் புகழைக் காப்பாற்ற எம்பெருமான் விறகுத் தலையனாக சிவலிங்கத்திலிருந்து தோன்றும் காட்சி அபாரம். மீனாட்சி அம்மன் சன்னதி பக்தி பரவசப்படுத்துகிறது. துர்க்கை யம்மன் சன்னதியையும் அதன் இரண்டு பக்கத்திலும் இருக்கும் கல்யானைகளையும் காணும்போது மதுரையம்பதியிலேயே இருப்பதாகத் தோன்றுகிறது. நல்லவேளையாகக் கொட்டகைக்குப் பக்கத்திலிருக்கும் எம். எஸ். எம். ரயில் என்ஜின்களின் அலறல் நாடகக் கொட்டகையையும் சென்னை நகரத்தையும் நினைவூட்டுகின்றன.

செண்பகப் பாண்டியனும் அவன் காதல் மனைவியும் தாமரைத் தடாகக் கரையில் வீற்றிருக்கிறார்கள். அந்தப் பதினறு அடி நாடகக் கொட்டகையில் அலை மோதும் தாமரைத் தடாகம் தோன்றும்படி காண்பித்து நம்மைத் திகைக்க வைக்கிறார்கள்.

நாடகம் பார்க்கும் ஒவ்வொருவரும் மழையில் நனைந்து விட்டோமே என்று நினைத்து ஒருவரை ஒருவர் தொட்டுப் பார்த்துக் கொள்ளும்படியான ஒரு காட்சி வருகிறது. திருக்குறிப்புத் தொண்ட நாயனார் சிவனடியாரின் ஆடையை வெளுத்து அன்றைக்கே கொடுக்க வேண்டும் என்று நினைத்து ஆற்றுக்குப் போகிறார். இடியும் மின்னலும் மழையுமாகப் பொழியச் செய்து

பகவான் பக்தனைச் சோதனை செய்கிறார். நாடகத்தின் கடைசிக் காட்சியில் எல்லையற்ற கடலையும் அதில் அட்டகாசம் செய்து வரும் சுறாமீனையும் காண்கிறோம். மேற்கூறிய காட்சிகள் எல்லாம் அந்தச் சின்னஞ் சிறு நாடகமேடையில் கண்மூடித் திறப்பதற்குள் தயாராகித் தோன்றுகின்றன.

சிவலீலா நாடகம் பார்த்து அனுபவிக்க வேண்டிய கலைக்காட்சி மட்டுமல்ல; தமிழர்களுடைய கற்பனைக்கும் அறிவுக்கும் பக்திக்கும் மிகச் சிறந்த அத்தாட்சியாகும்.

ஒவ்வொரு நடிகரும் தங்கள் தங்களுடைய பாத்திரங்களுக்கு ஏற்ப உணர்ச்சியுடன் நடிக்கிறார்கள். சிவபெருமானின் பல வேஷங்களில் விறகுத் தலையனாகவும், தருமிக்கு நறுக்கு ஓலை எழுதிக் கொடுக்கும் புலவராகவும், சிவனடியாராகவும், எல்லாம் வல்ல சித்தராகவும், வளையலாளனாகவும் நடிக்கும் ஸ்ரீ டி. கே. பகவதி, பொருத்தமான வேஷங்களுடன் வெண்கலநாதக் குரலில் 'கணீ'ரென்று பேசிக் கம்பீரமாகப் பாடி அனாயாசமாக நடித்துச் சபாஷ் பெறுகிறார்.

நாடகத்தின் நடு நடுவே பலப்பல வேஷங்களில் தோன்றிச் சபையோருக்குத் தம்முடைய இயற்கையான ஹாஸ்யத் திறமையாலும் அழகான நடிப்புத் திறமையாலும் ஸ்ரீ டி. என். சிவதாணு சிரிக்கப் பண்ணுகிறார்.

வறுமையே உருவமாக வாழ்ந்துவரும் தருமியின் வேடத்தில் தோன்றும் ஸ்ரீ கே. ராமசாமி 'பசீர், பசீர்' என்று பேசிச் சபையில் 'குபீர், குபீர்' என்று சிரிப்பை வரவழைத்து விடுகிறார்.

நாடகத்தின் ஆரம்பத்திலிருந்து கடைசி வரையில் நல்ல பாட்டுகள் இருக்கின்றன. உயர்தரமான ஹாஸ்யங்கள் அங்கங்கே நிறைந்து கிடக்கின்றன. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் நண்பர்களுடனும் மனைவி மக்களுடனும் பார்த்து மகிழ வேண்டிய குற்றமற்ற பக்தி மயமான நாடகம்.

ஜனவரி மாதம் 19-ந் தேதி நீதிபதி ஸி. என். பி. ஐயர் அவர்களின் தலைமையில் "சிவலீலா" நாடகம் நடக்கப் போகிறது. அன்றைய நாடகத்தின் வசூலை இந்த நாடகத்தை எழுதிய ஆசிரியரான குலசேகரம் ஸ்ரீ வைத்தியநாத பாகவதர் அவர்களின் ஞாபகார்த்த நிதிக்குக் கொடுக்கப் போகிறார்கள். ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களின் தமிழன்புக்கும் கலைப் பண்புக்கும் தமிழ் மக்கள் பூரண ஆதரவளிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 61. வீரத் தமிழ்ப் பெண்மணிகள்

கோகலேயின் நம்பிக்கை நிறைவேறவில்லை. காந்திஜி பயந்தபடியே தான் காரியம் நடந்தது. ஒரு வருஷத்திற்குள் மூன்று பவுன் தலைவரி எடுக்கப்பட்டு விடும் என்றும், அதற்குரிய மசோதா அடுத்த சட்டசபைக் கூட்டத்தில் கொண்டுவரப்படும் என்றும் ஸ்ரீ கோகலேயிடம் தென்னாப்பிரிக்கா மந்திரிகள் சொல்லியிருந்தார்கள். அந்த மாதிரி நடைபெறவில்லை. அதற்குப் பதிலாக ஜெனரல் ஸ்மட்ஸ், "நேட்டால் அங்கத்தினர்கள் மூன்று பவுன் தலைவரியை எடுப்பதற்கு விரோதமாயிருப்பதால் அதைப் பற்றி ஒன்றும் செய்வதற்கில்லை" என்று சொல்லி விட்டார். இம்மாதிரி நேட்டால் ஐரோப்பியர் மீது தளபதி ஸ்மட்ஸ் பாரத்தைப் போட்டதற்கு நியாயம் ஒன்றும் கிடையாது. ஏனெனில் அச்சமயம் நாலு மாகாணங்களுக்கும் சேர்ந்த மத்திய சட்டசபை ஏற்பட்டிருந்தது. மற்ற மாகாண அங்கத்தினர் ஆதரவு கொடுத்தால் பெரும்பான்மை வோட்டுகளால் மசோதா நிறைவேறிவிடும். எனவே, கோகலேயிடம் கொடுத்த வாக்குறுதியை மீறுவதற்கு ஜெனரல் ஸ்மட்ஸ் நேட்டால் ஐரோப்பியரின் எதிர்ப்பை ஒரு வியாஜமாக உபயோகித்தார் என்றே சொல்லவேண்டும்.

இவ்வாறு ஸ்ரீ கோகலேயின் நம்பிக்கை நிறைவேறாவிட்டாலும் அவர் தென்னாப்பிரிக்காவுக்கு விஜயம் செய்தது இந்தியர்களுக்கு ஒரு பெரும் நன்மையைச் செய்தது. இதுகாறும் காந்தி மகாத்மா அங்கே நடத்திய இயக்கம் நிறவேற்றுமை காரணமான தடைச் சட்டங்களை எதிர்த்தே நடந்தது. மேற்படி சட்டங்களினால் அதிகமாய்ப் பாதிக்கப்பட்டவர்கள் இந்திய வியாபாரிகள், குமாஸ்தாக்கள் முதலியோர்களே. ஆகையால் காந்திஜியின் இயக்கத்தை ஆதரித்தவர்களும் மேற்கூறிய படித்த வகுப்பினரேயாகும். இவர்களும் நாளடைவில் மனம் சோர்ந்து விட்டார்கள். கடைசியில் ஒரு சிலரே உறுதியாக நின்றார்கள்.

தென்னாப்பிரிக்கா மந்திரிகளை ஸ்ரீ கோகலே பார்த்துப் பேசிய போது நிறத் தனிச் சட்டங்களுடன் மூன்று பவுன் தலைவரி விஷயமாகவும் பேசினார். அந்தத் தலைவரியின் அநியாயத்தை எடுத்துச் சொல்லி மந்திரிகளிடமிருந்து அதை ரத்து செய்வதாக வாக்குறுதியும் பெற்றார். ஆகவே, கோகலேக்கு மந்திரிகள் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை என்ற காரணத்தின் பேரில் மூன்று பவுன் தலைவரியை எதிர்த்துச் சத்தியாக்கிரஹ இயக்கத்தைத் தொடங்குவது சாத்தியமாயிற்று.

மூன்று பவுன் தலைவரி, ஏற்கெனவே ஒப்பந்தத் தொழிலாளிகளாக வந்து ஒப்பந்தம் தீர்ந்த பிறகு தென்னாப்பிரிக்காவில் தங்கிய இந்தியத் தொழிலாளிகளையும் அவர்களுடைய குடும்பங்களையும் பாதித்தது. இந்த வரி 1895-ம் வருஷத்திலிருந்து அமுலில் இருந்து வந்தது. அப்படியிருக்க, 1907-ம் வருஷத்தில் ஆசியாக்காரர் சட்டத்தை எதிர்ப்பதற்காக ஆரம்பித்த இயக்கத்தில் மேற்படி தலைவரி விஷயத்தைச் சேர்த்துக் கொள்ள முடியவில்லை. ஸ்ரீ கோகலே வந்துவிட்டுப் போனதன் பயனாக, அதையும் சத்தியாக்கிரக இயக்கத்தின் நோக்கங்களில் ஒன்றாகச் சேர்த்துக் கொள்ள முடிந்தது.

அப்படிச் சேர்த்துக் கொண்டதினால் இயக்கம் அடைந்த நன்மையைச் சொல்லி முடியாது. தென்னாப்பிரிக்காவிலிருந்த இந்தியத் தொழிலாளிகள் இதுவரையில் மகாத்மாவின் இயக்கத்தைப் பொதுவாக ஆதரித்து வந்தார்களே தவிர, அதில் நேரடியாகக் கலந்து கொள்ளவில்லை. கலந்து கொள்வதற்குச் சந்தர்ப்பமும் கிட்டவில்லை. இப்போது அத்தகைய சந்தர்ப்பம் கிட்டியது. மூன்று பவுன் தலைவரியை எதிர்க்கும் போராட்டத்தில் இந்தியத் தொழிலாளிகள் ஆயிரக்கணக்கானவர்கள் நேர்முகமாகக் கலந்துகொள்வதற்கு வழி ஏற்பட்டது.

• • •

மறுபடியும் போராட்டம் தொடங்குவதைத் தவிர வேறு வழியில்லை என்று காந்திஜிக்குத் தெரிந்தவுடனே ஸ்ரீ கோகலேக்குக் கடிதம் எழுதினார். தமக்குக்

கொடுத்த வாக்குறுதி பங்கமடைந்ததை அறிந்து ஸ்ரீ கோகலே மிக்க வருத்தமடைந்தார். மேலே நடக்கவேண்டியதைப் பற்றித் தமது கவலையையும் தெரிவித்தார். "நீங்கள் கவலைப்பட வேண்டாம். இங்கே நாங்கள் உயிரைக் கொடுத்துப் போராடுவதென்று கங்கணம் கட்டிக் கொண்டு விட்டோம். மூன்று பவுன் தலைவரியை ரத்து செய்யும் வரையில் போராடுவோம்!" என்று மகாத்மா பதில் எழுதினார். இதற்கு மேல் கோகலே "சத்தியாக்கிரஹ இயக்கத்தில் குறைந்த பட்சம் எவ்வளவு பேர் சேரக் கூடும்? அதிகபட்சம் எவ்வளவு பேர் சேரலாம்? அவர்களுடைய பெயர்கள், குடும்பங்கள் முதலிய விவரங்களைத் தெரிவிக்கவும்" என்று கேட்டார்.

காந்தி மகான் எப்போதும் தமது சக்தியை அதிகப்படுத்திக் கணக்கிடுவதில்லை. கொஞ்சம் குறைவாகவேதான் மதிப்பிடுவது வழக்கம். சத்தியாக்கிரஹத்தில் ஈடுபடக் கூடிய 66 பேரின் ஜாபிதாவை காந்திஜி எழுதி அனுப்பினார். இவர்களில் குறைந்த பட்சம் 16 பேர் கடைசி வரையில் நின்று நிலைத்துப் போராடுவார்கள் என்று தெரியப்படுத்தினார். அத்தோடு இந்த விவரங்களையெல்லாம் கோகலே கேட்டிருப்பதின் காரணத்தை ஊகித்துத் தெரிந்து கொண்டு, "எங்களுக்குப் பண உதவி அனுப்புவது பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம். நாங்கள் எப்படியாவது சமாளித்துக் கொள்கிறோம். தங்களுடைய உடல் நிலையைப் பார்த்துக் கொள்ளவும்" என்று மகாத்மா எழுதினார். அப்போது கோகலேயின் உடல் நிலை சரியாக இருக்கவில்லை. ஆனாலும் மகாத்மாவுக்குக் கோகலே கண்டிப்பான பதில் ஒன்று எழுதினார். "உங்களுடைய கடமையை அங்கே நீங்கள் செய்யுங்கள். எங்களுடைய கடமையை இந்தியாவில் நாங்கள் செய்கிறோம். இங்கே நாங்கள் செய்ய வேண்டியதைப் பற்றி உங்களுடைய யோசனை தேவையில்லை!" என்று சிறிது கோபமாகவே எழுதினார்.

தென்னாப்பிரிக்காவில் காந்தி மகான் இறுதிப் போராட்டம் தொடங்கி நடத்தியபோது இந்தியாவில் ஸ்ரீ கோகலே பெருங் கிளர்ச்சி ஆரம்பித்துத் தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்குச் சாதகமாகப் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டி வந்தார். இதனுடைய பலன் என்ன என்பதைப் பின்னால் பார்ப்போம்.

• • •

மீண்டும் சத்தியாக்கிரஹப் போர் தொடங்குவதற்கு மகாத்மா காந்தி ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தபோது, இந்திய சமூகத்தின் தலையில் எதிர்பாராத இன்னொரு பாறாங்கல் வந்து விழுந்தது. அந்தப் பாறாங்கல்லைப் போட்டவர் கேப்டவுன் உயர்தர நீதி மன்றத்தின் நீதிபதி ஸியரல் என்பவராகும்.

இந்தியாவிலிருந்து தென்னாப்பிரிக்காவுக்குச் சென்ற இந்தியர் பலர் கலியாணம் செய்துகொண்டு மனைவி மக்களுடன் சென்றார்கள். வேறு பலர் தென்னாப்பிரிக்காவிலேயே மணம் புரிந்துகொண்டார்கள். இவர்களில் ஹிந்துக்கள் ஹிந்து சம்பிரதாயத்தின்படியும் முஸ்லிம்கள் முஸ்லிம் வழக்கத்தை ஒட்டியும் சடங்குகள் நடத்திக் கலியாணம் செய்துகொண்டிருப்பது இயல்பல்லவா? நாற்பது வருஷகாலமாக மேற்படி கலியாணங்கள் தென்னாப்பிரிக்காவில் அங்கீகரிக்கப்பட்டு வந்தன. திடீரென்று மேற்படி கலியாணங்கள் எல்லாம் தென்னாப்பிரிக்காவில் செல்லுபடியாகா என்று ஏற்பட்டால் இந்தியர்களின் மனோநிலைமை எப்படி யிருக்கும்? கேப்டவுன் கோர்ட்டில் நீதிபதி ஸியரல் விசாரணை செய்த ஒரு வழக்கு சம்பந்தமாக மேற்கண்டவாறு தீர்ப்பு அளித்து விட்டார். அதாவது கிறிஸ்தவ சம்பிரதாயப்படி கலியாணம் நடந்து விவாக ரிஜிஸ்ட்ரார் ஆபீஸில் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட கலியாணங்கள்தான் சட்டப்படி செல்லும் என்றும் மற்றவையெல்லாம் செல்லுபடியாகா என்றும் மேற்படி நீதிபதி தீர்ப்பு அளித்தார். அந்தத் தீர்ப்பு ஊர்ஜிதம் ஆகும் பட்சத்தில் ஆயிரக்கணக்கான இந்தியக் குடும்பங்களில் மனைவிமார்கள் 'மனைவி' என்னும் உரிமையை இழந்துவிட வேண்டியதாகும். அப்படியானால் அந்த 'மனைவி' யில்லாத ஸ்திரீக்கும் அவளுடைய புருஷனுக்கும் பிறந்த குழந்தைகள் சட்டப்படி அவர்களுடைய வாரிசுகள் ஆகமாட்டார்கள் பெற்றோர்களின் சொத்துக்குக் குழந்தைகளுக்கு உரிமை யில்லாமல் போய்விடும். தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கு இது எவ்வளவு கேவலமான — பயங்கரமான — நிலைமை என்று சொல்லவேண்டியதில்லையல்லவா?

மேற்படி தீர்ப்பினால் இந்திய சமூகத்தில் ஏற்பட்ட கலக்கத்தைச் சொல்லி முடியாது. காந்திஜி தமது வழக்கப்படி சர்க்காருக்கு உடனே ஒரு கடிதம் எழுதினார். "நீதிபதி ஸியரல் தீர்ப்பு சரியானதா? இப்போதுள்ள சட்டப்படி அது சரி என்று ஏற்படும் பட்சத்தில், சட்டத்தை உடனே திருத்தி இந்தியர்கள் தங்கள் மதசம்பிரதாயப்படி செய்து கொண்ட கலியாணங்களைச் சட்டரீதியாகச் செல்லுபடி செய்யப் போகிறீர்களா?" என்று காந்திஜி கேட்டிருந்தார். ஆனால் இறுமாப்பின் சிகரத்தில் வீற்

திருந்த தென்னாப்பிரிக்கா சர்க்கார் மேற்படி கடிதத்தின் பேரில் எந்தவித நட வடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை.

இனிமேல் காலந் தாழ்த்துவது முறை யல்ல என்று காந்திஜி தீர்மானித்தார். சத்தியாக்கிரஹக் கமிட்டியைக் கூட்டி னார். உடனே சத்தியாக்கிரஹப் போரைத் தீவிரமாக ஆரம்பிக்க வேண் டும் என்று கமிட்டி தீர்மானித்தது. இதுவரையில் ஆண்மக்கள் மட்டுந்தான் போரில் கலந்து கொண்டார்கள். பெண் களைக் கஷ்டத்துக்கு உள்ளாக்குவதை யாரும் விரும்பவில்லை இப்போது இந்தி யப் பெண் குலத்துக்கு இத்தகைய அவ மானமும் அநீதியும் இழைக்கப்பட்டிருக் கும் போது, பெண்களைப் போரில் சேர வேண்டாம் என்று தடுப்பது எப்படி நியாயம் ஆகும்? அதற்குப் பதிலாக, "ஸ்திரீகளும் இந்தப் போரில் சேர வேண்டும் என்று கேட்டுக் கொண்டு கமிட்டியார் தீர்மானம் செய்தனர்.

முதலில் டால்ஸ்டாய் பண்ணையில் வசித்த ஸ்திரீகளைச் சத்தியாக்கிரஹப் போரில் சேருகிறீர்களா என்று காந்திஜி கேட்டார். அவர்கள் உற்சாகத்துடன் அதற்கு இணங்கினார்கள்.

"போராட்டத்தின் போதும் சிறைச் சாலையிலும் பல கஷ்டங்களுக்கு உள்ளாக நேரலாம்" என்று மகாத்மா எச்சரிக்கை செய்தார். எந்தவித கஷ்டத்துக்கும் தயார் என்று அந்தச் சகோதரிகள் சொன்னார்கள். அவர்களில் ஆறு பேர் கைக் குழந்தைக் காரிகள். ஒரு ஸ்திரீ கர்ப்பிணி. இப்படி யெல்லாமிருந்தும் அவர்கள் சிறிதும் தயங்கவில்லை.

"போராட்டத்தில் ஈடுபட்டே தீருவோம் என்று முன்வந்த அந்தச் சகோதரிகள் அவ் வளவு பேரும் தமிழ்நாட்டுப் பெண்கள்" என்று மகாத்மா மகிழ்ச்சியுடனே குறிப் பிட்டிருக்கிறார். அவர்களுடைய பெயர் களையும் எழுதி யிருக்கிறார் :—1. ஸ்ரீமதி தம்பி நாயுடு, 2. ஸ்ரீமதி என். பிள்ளை, 3. ஸ்ரீமதி கே. முருகேச பிள்ளை, 4. ஸ்ரீமதி பெருமாள் நாயுடு, 5. ஸ்ரீமதி பி. கே. நாயுடு, 6 ஸ்ரீமதி கே. சின்னசாமி பிள்ளை, 7. ஸ்ரீமதி என். எஸ். பிள்ளை, 8. ஸ்ரீமதி ஆர். ஏ. மூதலிங்கம், 9. ஸ்ரீமதி பவானி தயாள், 10. குமாரி மீனாட்சிப் பிள்ளை, 11 குமாரி முருகேச பிள்ளை.

மேலே கண்ட பெயர்களைக் காந்திஜி "தென்னாப்பிரிக்கா சத்தியாக்கிரஹம்" என்ற நூலில் குறிப்பிட்டிருக்கிறார். பெண்களுடைய பெயர் ஞாபகமில்லாத படியால் பெரும்பாலும் அவரவர்களு டைய கணவன்மார்களுடைய பெயரால் இங்கிலீஷ் முறைப்படி 'மிஸ்ஸஸ்' என்ற அடைமொழி சேர்த்திருக்கிறார்.

"சத்தியாக்கிரஹத்தில் சேர முன்வந்த பெண்மணிகள் அனைவரும் தமிழ்நாட்டுப் பெண்களே!" என்று மகாத்மா எழுதி யிருப்பதைப் படிக்கும் தமிழன் எவனுக் குத்தான் தோள் பூரியாமல் இருக்கும்? இதைப் படித்த பிறகு, பழைய தமிழ் நூல்களில் தமிழ்நாட்டு வீரத் தாய்மார் களின் அரு பெருஞ்செயல்களைப் பற்றிப் படிக்கும் போது, அவை முன்னைக் காட் டிலும் உண்மை ஒளி அதிகம் பெற்று விளங்கும் அல்லவா?

* * *

காந்தி மகான் டால்ஸ்டாய் பண்ணையி லிருந்து போனிக்ஸ் ஆசிரமத்துக்குச் சென்றார். அங்கிருந்தவர்களில் "இந்தி யன் ஒப்பீனியன்" பத்திரிகை நடத்துவ தற்காக இரண்டொருவரையும் குழந் தைகளையும் தவிர மற்றவர்கள் எல் லாரும் சத்தியாக்கிரஹப் போரில் ஈடுபட வேண்டும் என்று சொன் னார் ஆண்மக்கள் உடனே சம்மதித் தார்கள். பிறகு அங்கிருந்த சகோதரி களை அழைத்து மகாத்மா பேசினார். போனிக்ஸ் ஆசிரமத்தில் வசித்த குஜ ராத்திப் பெண்கள் வெளி உலகிலே சென்று பழகியவர்கள் அல்ல; சத்தியாக் கிரஹ இயக்கத்தில் அவர்களுக்குப் பயிற் சியும் கிடையாது. ஆயினும் மகாத்மா அவர்களை ஓரிடத்தில் சேர்த்து டால்ஸ் டாய் பண்ணையில் வசித்த தமிழ் நாட் டுப் பெண்மணிகளின் தீரத்தை உதா ரணமாக எடுத்துச் சொன்னார். சத்தி யாக்கிரஹத்தில் சேர்வதினால் ஏற்படக் கூடிய கஷ்டங்களையும் கூறினார் அந்த ஸ்திரீகளில் பலர் மகாத்மாவுக்கு உற வினர். "எனக்காக நீங்கள் இந்தக் காரியத்தில் இறங்க வேண்டாம். மன தில் பரிபூரண உறுதி யிருந்தால் இந்தப் போராட்டத்தில் சேருங்கள். இல்லா விடில் சும்மா இருந்து விடுங்கள். ஒரு தடவை போரில் சேர்ந்த பிறகு சோர்ந்து போய்ப் பின் வாங்கினால் எனக்கு அதைக் காட்டிலும் துன்பம் வேறு ஒன்றும் இல்லை. இயக்கத்துக்கும் அதனால் பெருந் தீமை விளையும்" என்று எச்சரித்தார். எல்லாவற்றையும் கேட்ட பிறகு அச் சகோதரிகள் "நாங்களும் இயக்கத்தில் சேர்ந்தே தீருவோம்" என்று தீர்மான மாகக் கூறினார்கள்.

போனிக்ஸில் வசித்த பெண்களில் பலர் காந்தி மகானின் உறவினர் என்று பார்த்தோம் அல்லவா? அந்த உறவினருக் குள்ளே மிக நெருங்கிய உறவினர் ஒருவர் இருந்தார். அவர் தான் மகாத்மாவின் வாழ்க்கைத் துணைவியான ஸ்ரீமதி கஸ் தூரிபாய். எல்லாப் பெண்களையும் காந்திஜி அழைத்துப் பேசியபோது கஸ் தூரிபாயை மட்டும் கூப்பிடவில்லை. அவ

ரிடம் இந்த விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவும் காந்திஜி விரும்பவில்லை. ஸ்ரீமதி கஸ்தூரிபாயின் குண சீலத்தை நன்கு அறிந்தவராதலால், தாம் சொல்லுகிற காரியத்தை அவர் உடனே ஒப்புக்கொண்டு விடுவார் என்றும் அது நல்லதல்லவென்றும் மகாத்மா கருதினார்.

மற்றச் சகோதரிகளை அழைத்து மகாத்மா பேசிய விஷயம் ஸ்ரீமதி கஸ்தூரிபாயின் காதில் விழுந்தது. அவர் உடனே காந்திஜியிடம் வந்து, "என்னை மட்டும் எதற்காக ஒதுக்கி வைத்தீர்கள்? என்னிடம் என்ன குற்றத்தைக் கண்டீர்கள்? தாங்கள் மற்றவர்களுக்குக் காட்டுகிற வழியில் நான் அல்லவா முதலில் நடந்து காட்டவேண்டும்? என்னை நீங்கள் இவ்விதம் ஒதுக்கிவிட்டதை எண்ணினால் எனக்கு ரொம்பவும் வருத்தமாயிருக்கிறது!" என்று சொன்னார்.

அதற்கு மகாத்மா காந்தி கூறியதாவது:—'உனக்கு வருத்தம் கொடுப்பதில் எனக்கு ஒன்றும் சந்தோஷமில்லை. வேண்டுமென்று அப்படிச் செய்யமாட்டேன். நீ சத்தியாக்கிரஹப் போரில் சேர்ந்து சிறைக்குச் சென்றால் எனக்கு அளவில்லாத மகிழ்ச்சி உண்டாகும். ஆனால் நான் சொல்வதற்காக நீ சிறைக்குச் செல்வது என்பது கூடாது. இந்த மாதிரி இயக்கங்களில் அவரவர்கள் தங்கள் சொந்த அபிப்பிராயத்தின்படி, சொந்த பலத்தையே நம்பி, ஈடுபட வேண்டும். என்னுடைய வார்த்தைக்காக நீ இப்போது இயக்கத்தில் சேர்ந்துவிட்டு அப்புறம் கோர்ட்டில் நிற்கும் போது பயப்பட்டாலும், சிறைக் கஷ்டங்களைப் பார்த்துப்பின் வாங்கினாலும், என்னுடைய நிலைமை என்ன ஆகும் என்று பார்! அப்படி நடந்துவிட்டால் பிறகு உன் முகத்தை எப்படி நான் பார்ப்பேன்? உலகத்தின் முன்னிலையில் எப்படி நான் நிமிர்ந்து நிற்கமுடியும்? மற்ற ஸ்திரீகளுக்கும் உனக்கும் இந்த வித்தியாசம் இருப்பதினாலேயே நான் உன்னைச் சிறைக்குப் போகும்படி கேட்கவில்லை."

கஸ்தூரிபாய் என்னும் தெய்வப் பெண்மணி பதில் கூறினார்:—'நீங்கள் அனுபவிக்கிற கஷ்டம் எதுவாயிருந்தாலும் அதை நானும் பகிர்ந்து அனுபவிப்பேன். என்னுடைய குழந்தைகள் சிறைச்சாலை சென்று அடையும் கஷ்டங்களை நானும் அடைவேன். கோர்ட்டிலோ சிறைச்சாலையிலோ நான் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு விடுதலையடைந்தால், அப்புறம் என் முகத்திலேயே நீங்கள் விழிக்க வேண்டாம்; நான் உங்களுடைய பத்தினி அல்லவென்று நிராகரித்து விடுங்கள்!"

இந்தப் பதிலினால் மகாத்மா எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தார். ஆயினும் இன்னும் ஒரு முறை எச்சரிக்கை செய்தார்:—"நீ இவ்வளவு பிடிவாதமாகச் சொல்லுகிறபோது நான் உன்னைச் சேர்த்துக்கொண்டே ஆகவேண்டும். ஆனால் இன்னமும்கூட நீ யோசிப்பதற்கு அவகாசம் இருக்கிறது. உன்னுடைய தீர்மானத்தை மாற்றிக்கொள்வதில் அவமானம் ஒன்றும் இல்லை. நன்றாக மறுபடியும் யோசித்துச் சொல்லு."

"இனிமேல் யோசிப்பதற்கு ஒன்றுமேயில்லை. முடிவான தீர்மானம் செய்துவிட்டேன். ஒருநாளும் மாறமாட்டேன்" என்றார் கஸ்தூரிபாய்.

தமது வாழ்நாள் இறுதி வரையில் ஸ்ரீமதி கஸ்தூரிபாய் மாறவேயில்லை. மகாத்மாவின் ஒவ்வொரு இயக்கத்திலும் அவர் சேர்ந்து சிறை சென்று கஷ்டப்பட்டார். கடைசியாக, சிறைச்சாலைக்குள்ளேயே கணவருடைய மடியில் படுத்துக்கொண்டு உயிர் நீத்தார். இந்தியப் பெண் குலத்தின் சலியாத மன உறுதிக்கு ஸ்ரீமதி கஸ்தூரிபாயைப் போன்ற சிறந்த உதாரணம் வேறு எது?

# அலை ஓசை

## கல்கி

### பன்னிரண்டாம் அத்தியாயம்

## "சூரியா! போய்விடு!"

டெலிபோனில் ராகவனுடைய குரலைக் கேட்ட அதே சமயத்தில் சீதாவின் முகத்தையும் சூரியா பார்த்தான். ஏதாவது தவறு நேர்ந்து விட்டதோ என்ற எண்ணத்தினால் அவன் உள்ளம் குழம்பிற்று. ராகவன் "யார்? சூரியாவா? எப்போது வந்தாய்?" என்று கேட்டதற்கு, "இன்றைக்குத்தான்!" என்று பதில் அளித்தான்.

"ஓகோ! நான் வருகிற வரையில் இருப்பாயல்லவா?" என்று ராகவன் கேட்டான். "ஆகா! இருக்கிறேன்!" என்றான் சூரியா, பிறகு, "அத்தங்கா! மாப்பிள்ளை பேசுகிறார்!" என்று சொல்லி டெலிபோன் ரிஸீவரைச் சீதாவின் கையில் கொடுத்தான்.

ரிஸீவரைக் காதில் வைத்துக் கேட்ட போது சீதாவின் முகம் மேலும் பீதியைக் காட்டியது. ராகவன் என்ன கேட்டான் என்பது சூரியாவின் காதில் விழவில்லை. சீதா, "இல்லையே! இன்றைக்குத்தானே வந்திருக்கிறான்!" என்று சொன்னபோது அவள் கண்கள் கலங்கிக் கண்ணீர் துளித்ததைச் சூரியா பார்த்தான். பிறகு, "சரி! சரி! இருக்கச் சொல்கிறேன்!" என்று சொல்லிவிட்டு டெலிபோன் ரிஸீவரை வைத்து விட்டாள்.

"அத்தங்கா! மாப்பிள்ளை என்ன சொன்னார்? எதற்காக உன் கண் இப்படிக் கலங்கியிருக்கிறது?" என்று சூரியா கவலையுடன் கேட்டான்.

சீதா சிறிது நேரம் எங்கேயோ பார்த்துக்கொண்டு சும்மா இருந்தாள். பிறகு திடீரென்று விம்மிக்கொண்டே "சூரியா! நீ போய் விடு! உடனே போய் விடு!" என்றாள்.

"அத்தங்கா! இது என்ன? எதற்காக என்னைப் போகச் சொல்கிறாய்? மாப்பிள்ளை இருக்கச் சொல்லியிருக்கிறாரே!" என்றான் சூரியா.

"அதனாலேதான் உன்னைப் போகச் சொல்கிறேன். என்னிடமும் உன்னை இருக்கப் பண்ணும்படிதான் சொன்னார். ஆனால் எனக்கு என்னமோ பயமாயிருக்கிறது, சூரியா! நீ இன்றைக்கு இங்கே இருந்தால் ஏதாவது அபாயம் நேரிடும் என்று தோன்றுகிறது. போய் விடு!"

"நான் அவசரப்பட்டுக் கொண்டு போனால்தான் அபாயம் வரும். அவர் இரு என்று சொல்லியிருக்கும்போது நான் போகலாமா? வீண் சந்தேகத்துக்கு இடமாகாதா?"

"சந்தேகம் இனிமேலேதானா வரப்போகிறது? உனக்கு ஒன்றுமே தெரியவில்லை, சூரியா! பச்சைக் குழந்தையாயிருக்கிறாய்! நம் இருவர் பேரிலும் தகாத சந்தேகம் அவருக்கு ஏற்பட்டிருக்கிறது. என்னை அவர் படுத்துவதெல்லாம் அதற்காகத்தான்."

"சுத்த மூடத்தனம்! என்பேரில் மாப்பிள்ளைக்குச் சந்தேகமாவது! அவர் இப்போது வரட்டும்; நேரிலே கேட்டு விடுகிறேன். அவருக்கு உன்னைக் கலியாணம் செய்து வைத்ததே நான்தானே?" என்றான் சூரியா.

"நீதான் சூரியா! நீதான்! நீ செய்த பெரிய தவறு அதுதான்! நேரில் பார்த்துப் பேசுவதினால் அவருடைய சந்தேகத்தை நீ போக்கிவிட முடியாது. ஏதாவது நீ பதில் சொன்னால் அவருடைய கோபம் அதிகமாகும். நீ இன்றைக்கு இங்கே இருந்தால் நிச்சய

மாகக் கொலை விழும்! அந்தப் பாவத்துக்கு என்னை ஆளாக்காதே! தயவு செய்து போய் விடு! உன் காலில் விழுந்து கேட்டுக் கொள்கிறேன்."

சீதாவின் வெறி நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகி வருவதைச் சூரியா கவனித்தான். ஆனாலும் அவனுக்குப் போக மனம் வரவில்லை. "சீதா! பதட்டம் வேண்டாம்! கொஞ்சம் நிதானமாக யோசித்துப் பார்! நான் இப்போது போய்விட்டால் அவருடைய சந்தேகத்தை உறுதிப் படுத்துவது போல் ஆகாதா?" என்றான்.

"உறுதிப்பட்டால் படட்டும். அவரையே தெய்வம் என்று நான் எண்ணிக் கொண்டிருந்தும் எப்போது சந்தேகப்படுகிறாரோ, அப்போது அவருடைய சந்தேகத்தை உண்மையாக்கி விட்டால்தான் என்ன? அதனாலேயே என்னை எங்கேயாவது அழைத்துக் கொண்டு போகும்படி உன்னைக் கேட்டேன். ஆனால் நீ பயங்கொள்ளி; கோழை. ஸ்திரீகளின் சுதந்திரத்தைப் பற்றி வாய் கிழியப் பேசுவாயே தவிர, அதற்காக ஒரு துரும்பு எடுத்துப் போட மாட்டாய்! உன்னை நான் நம்பி யிருக்கவும் இல்லை. ஒருநாளைக்கு இவரை விட்டுவிட்டு ஓடவே போகிறேன். உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். என்னை வீண் கஷ்டத்துக்கு ஆளாக்காமல் உடனே போய் விடு. உன்னால் எனக்கு உபகாரம் இல்லா விட்டாலும் அபகாரமாவது இல்லாமல் இருக்கட்டும்!"

இனிமேல் தான் அங்கு இருந்தால் சீதாவின் இரத்த நாம்புகள் வெடித்து அவள் மூர்ச்சையாகி விடுவாள் என்று சூரியா பயந்தான். போய்விட வேண்டியதுதான். ஆனால் அப்புறம் என்ன? சீதாவின் நிலைமையைப் பற்றி எப்படித் தெரிந்துகொள்வது?—ஆகா! டெலிபோன் ஒன்று இருக்கிறதே? டெலிபோன் மூலம் நாளைக்கு விசாரித்துக் கொள்ளலாம். இன்றைக்கு ஒரு இராத்திரி நடக்கிறது நடக்கட்டும். நாளைத் தாரிணியுடன் யோசித்துக் கொண்டு சீதா விஷயமாக என்ன செய்கிறது என்று தீர்மானிக்கலாம்.

"சரி! அத்தங்கா! நீ இவ்வளவு வற்புறுத்துகிறபடியால் நான் போகிறேன். அப்புறம் நாம் எப்போது சந்திப்பது? நாளைக்கு டெலிபோன் பண்ணட்டுமா?"

"ஆமாம்; நாளைக்குப் பதினொரு மணிக்கு மேல் டெலிபோனில் பேசு. எல்லாம் சொல்கிறேன்."

"அத்தங்கா! ஒரே ஒரு விஷயம் ஞாபகம் வைத்துக் கொள். உனக்கு உண்மையில் உதவி தேவையாயிருந்தால் நான் அதற்குப் பின் வாங்க மாட்டேன். உன்னுடைய மனதை திடப்படுத்திக் கொண்டு சொல்லு. என்ன சொல்கிறாயோ, அந்தப்படி செய்யத் தயாராயிருக்கிறேன். உன்னுடைய க்ஷேமந்தான் எனக்குப் பெரிது; தேச விடுதலைகூட அப்புறந்தான்!" என்றான் சூரியா.

இப்படிச் சூரியா சொன்னபோது நூற்றுக்கு நூறு பங்கு அவனுடைய மனதில் உண்மையாக எண்ணியதையே சொன்னதாகக் கூற முடியாது. அவசரப்பட்டுச் சீதா ஏதாவது செய்து விடக் கூடாதே என்ற எண்ணத்தினால் அவளைத் தைரியப்படுத்துவதற்காகவே சொன்னான்.

சீதாவின் மனது இதற்குள் அடியோடு மாறிப் போயிருந்தது. சூரியா சொன்னதை நூற்றுக்கு நூறு பங்கு உண்மையாகவே எடுத்துக் கொண்டு, "ரொம்ப வந்தனம், அம்மாஞ்சி! அபாய காலத்தில் உன்னுடைய உதவியைக் கோரும்படி அம்மா எனக்குச் சொல்லி யிருந்தாள். அவளுடைய வாக்கு வீண் போகவில்லை. நாளைக்கு மத்தியானத்துக்கு மேலே டெலிபோனில் பேசு. நானும் அதற்குள் நன்றாக யோசித்து வைக்கிறேன். அவசரப்பட்டு ஒரு காரியத்தைச் செய்தோம் என்ற பெயர் வேண்டாம். இல்லாவிட்டால் இப்போதே என்னை அழைத்துக் கொண்டு போகும்படி சொல்லியிருப்பேன்!" என்றாள் சீதா.

சூரியா புறப்பட எழுந்தான். கைத் துப்பாக்கியை எடுத்தவுடன் அதைக் கால் சட்டையின் பைக்குள்ளே போட்டுக் கொண்டிருந்தான். "இந்தப் பித்துக்குளி வீட்டில் துப்பாக்கி இருப்பது ஆபத்து. நம்மிடம் இருந்தால் ஒரு சமயம் பயன்படும்!" என்று ஏற்கெனவே முடிவு செய்திருந்தான். அதன்படி கைத் துப்பாக்கியுடன் கிளம்பிச் செல்ல ஆயத்தமானான்.

அப்போது வாசலில் 'பாம்' 'பாம்' என்ற சத்தம் கேட்டது. மோட்டார் கார் 'விர்' என்று வேகமாக வந்து வீட்டு வாசலில் நின்றது. சீதாவும் சூரியாவும் திகைத்து நின்றார்கள்.

ராகவன் வண்டியை வீட்டு முகப்பில் நிறுத்திவிட்டு இறங்கி விடு விடு என்று உள்ளே வந்தான்.

சூரியாவையும் சீதாவையும் மாற்றி மாற்றி வெறித்துப் பார்த்தான். அவன் உள்ளத்தில் குடிகொண்டிருந்த குரோதம் அவனுடைய பார்வையில் ஒருவாறு தெரிந்தது. ஆனால் வாய் வார்த்தையில் குரோதத்தைக் காட்டிக் கொள்ளாமல் "என்ன சூரியா? புறப்படத் தயாராக நிற்கிறாய் போலிருக்கிறதே!" என்றான்.

"ஆமாம், மாப்பிள்ளை! போக வேண்டும். மணி பன்னிரண்டரை ஆகிவிட்டதல்லவா? நீங்கள் வந்ததும் புறப்படலாம் என்று காத்துக்கொண்டிருந்தேன்" என்றான் சூரியா.

"அதென்ன? இத்தனை நேரம் கழித்து எங்கே போவாய்? பெரிய 'நைட் பர்ட்' (இராத்திரி சஞ்சாரப் பறவை) ஆக இருக்கிறாயே?"

"நீங்கள் என் தோழனாகத்தான் இருக்கிறீர்கள். இரவு பன்னிரண்டு மணிக்குமேல் வீட்டுக்கு வந்திருக்கிறீர்களே?" என்று சூரியா கொஞ்சம் துடுக்காகப் பதில் சொல்லி ராகவனுடைய கோபத்தைக் கிளறி விட்டான்.

"நான் ஓரிடத்துக்கு முக்கியமான வேலையாகப் போயிருந்தேன்"

"நானும் வேலையாகத்தான் போக வேண்டியிருக்கிறது. இன்று இராத்திரி சில சிநேகிதர்களைச் சந்திப்பதாகச் சொல்லியிருக்கிறேன்."

"அழகுதான்! இத்தனை நேரம் கழித்துச் சிநேகிதர்களைச் சந்திக்க வாவது? சந்தித்து என்ன செய்வீர்கள்? எங்கேயாவது கொள்ளையடிக்கப் போகிறீர்களா, என்ன?"

"கொள்ளையடிக்கப் போகிறவர்களும் இராத்திரியில் போவார்கள்; அவர்களைப் பிடிக்கப் போகிறவர்களும் இராத்திரியிலேதானே போய் ஆக வேண்டும்? இந்தியா தேசத்தைக் கவர்ந்த கொள்ளைக்காரர்களைத் துரத்தியடிக்கும் கைங்கரியத்தில் நாங்கள் ஈடுபட்டிருக்கிறோம். உங்களுக்குத் தெரியாதா, மாப்பிள்ளை?"

"எனக்கு எப்படித் தெரியும்? உன் அத்தங்காளுக்கு ஒருவேளை தெரிந்திருக்கலாம். அவளை நீ அடிக்கடி வந்து பார்த்துவிட்டுப் போகிறாய்... .."

"அடிக்கடி நான் வந்து பார்ப்பதில்லையே? மூன்று மாதத்துக்கு முன்னால் ஒரு தடவை வந்திருந்தேன். அப்போது நீங்கள் வெளி ஊருக்குப் போயிருந்தீர்கள். ஆனால் உங்கள் தாயார் இருந்தார். அவரைத் தரிசித்து விட்டுப் போனேன்."

"அது கிடக்கட்டும், அப்பா! இப்போது நீ எங்கெங்கேயோ போய்விட்டு வந்தாயாம். மதராஸுக்குக் கூடப் போயிருந்தாயாம். அவ்விடத்து விஷயங்கள் எல்லாம் உன்னிடம் தெரிந்து கொள்ளலாம் என்றல்லவா இவ்வளவு அவசரமாக ஓடி வந்தேன்? நீ போக வேண்டும் என்கிறாயே? இராத்திரி இங்கே தங்கியிருந்துவிட்டுக் காலையில் போகக் கூடாதா?"

"இல்லை, ஸார்! நான் அவசியம் இப்போதே போகவேண்டும். மதராஸில் உங்கள் தாயாரையும் குழந்தையையும் பார்த்தேன். குழந்தை இங்கே வரவேண்டும் என்று ஆசைப்பட்டாள். ஆனால் வழியில் எனக்குப் பல வேலைகள் இருந்தபடியால் அவளை நான் அழைத்து வரவில்லை. மற்ற விவரங்கள் எல்லாம் இன்னொரு நாள் சாவகாசமாகச் சொல்கிறேன்"

"இன்னொரு நாள் என்றால் என்றைக்கு?" என்று ராகவன் கேட்டான்.

"சௌகரியப்பட்டால் நாளைக்கே வருகிறேன். இல்லாவிட்டால் மறு நாள் வருகிறேன். என்னுடைய பிரயாண விவரங்கள், அநுபவங்கள் எல்லாம் சொல்கிறேன்."

"சரி; அப்படியானால் போய் வா! நாளைக்கு வருகிறதாயிருந்தாலும் இரவிலேதான் வருவாயாக்கும்!"

"ஆமாம்; போலீஸ்காரர் கண்ணுக்குப் படாமல் வருவதாயிருந்தால் இராத்திரியில்தானே வரவேண்டியிருக்கிறது? என்னுடைய காரியாதிகள் சம்பந்தமாக உங்களுக்குத் தொந்தரவு ஏதுவும் விளைவதை நான் விரும்பவில்லை. சர்க்கார் உத்தியோகத்தில் இருக்கிறீர்கள் அல்லவா? அதுவும் சாமானிய உத்தியோகமா?"

"ஓஹோ! அவ்வளவு தயவு என் பேரில் வைத்திருக்கிறாயா? போகட்டும்! ராஜம்பேட்டை கிட்டா வய்யர் குமாரன் தலையில் இப்படியா எழுதியிருக்க வேண்டும்?"

"எப்படி எழுதியிருக்கிறது? எதைப் பற்றிச் சொல்கிறீர்கள்?"

"இப்படிப் போலீஸ்காரர்களுக்குப் பயந்து திருடனைப்போல் இராத்திரியில் ஒளிந்து திரிய வேண்டியிருப்பதைப் பற்றித்தான். இருக்கட்டும், சூரியா! உன்னுடைய சிநேகிதி தாரிணி எங்கே இருக்கிறாள்? அவளை நீ பார்ப்பதுண்டா?"

சூரியா சீதாவின் முகத்தைப் பார்த்தான். அவளுடைய முகம் கொடூரமாவதைக் கவனித்தான்.

"தாரிணி இந்த ஊரிலேதான் இருக்கிறாள் என்று நினைக்கிறேன். ஒருவேளை பார்த்தாலும் பார்ப்பேன். ஆனால் நிச்சயம் இல்லை."

"ஒருவேளை பார்த்தால் ஒரு முக்கியமான விஷயம் இருக்கிறது என்றும் அவளை நான் சந்திக்க விரும்புவதாகவும் சொல்லு. அவளுடைய இருப்பிடம் உனக்குத் தெரியுமா?"

"தெரியாது. பழைய இருப்பிடம் தெரியும். ஆனால் இப்போது தாரிணி அங்கே இல்லை. வேறு ஜாகைக்கு மாற்றிக் கொண்டு போயிருக்கிறாள்."

"பழைய ஜாகை எனக்கும் தெரியும். புது இடம் தெரியாது. ஒரு நாள் பழைய டில்லியில் ஜும்மா மசூதிக்குப் பக்கம் நான் போய்க்கொண்டிருந்த போது தாரிணி மாதிரி ஒருத்தி போவது தெரிந்தது. அவளேதான் என்று நினைத்துப் பார்த்துப் பேசுவதற்காகப் போனேன். திடீரென்று அவள் குறுகலான சந்து ஒன்றில் புகுந்து அவசரமாகச் சென்று அங்கே ஒரு வீட்டுக்குள் புகுந்தாள். எப்படியும் அவளைப் பார்த்துவிடுவது என்று வீட்டுக் கதவை இடித்தேன். அந்த வீதி துருக்க வீதி போலிருக்கிறது. நாலு முஸ்லிம்கள் வந்து என்னைச் சூழ்ந்து கொண்டு சண்டைக்கு வந்து விட்டார்கள். அவர்களிடமிருந்து தப்பி வருவது பெரும்பாடாகி விட்டது. சூரியா! முதலில் நீங்கள் இந்தத் துருக்கர்களை ஒழித்துக் கட்ட வேண்டும். இல்லாவிட்டால் இந்தியா தேசம் உருப்படப் போவதில்லை."

"நாங்கள் அப்படி நினைக்கவில்லை. முஸ்லிம்கள் இந்த நாட்டில் பிறந்து வளர்ந்தவர்கள்; நம் சகோதரர்கள். அவர்களை எப்படி ஒழித்துக் கட்ட முடியும்? வெள்ளைக்காரர்களை அடித்து விரட்டி விட்டால், அப்புறம்....."

"அப்புறம் நீங்கள் வைத்ததுதான் சட்டமாயிருக்கும். அரசாங்கமே உங்கள் கையில் வந்துவிடும்."

"அது எனக்குத் தெரியாது, மாப்பிள்ளை! சுதந்திரப் போரில் நாங்கள் எல்லாம் உயிர் துறக்க நேரிட்டாலும் நேரிடலாம். ஆனால் ஒன்று நிச்சயம். இந்த நாட்டு ஜனங்களின் பிரதிநிதிகள் இந்தியாவைக் கூடிய சீக்கிரம் ஆளப்போகிறார்கள். நேரமாகி விட்டது; நான் போய் வருகிறேன்" என்று சொல்லி விட்டுச் சூரியா புறப்பட்டுச் சென்றான்.

அவன் போவதைப் பொருட்படுத்தாமல் ராகவன் சோபாவில் உட்கார்ந்தபடி இருந்தான். ஆனால் சீதா சூரியாவின் பின்னோடு வாசல் வரையில் போனாள். வாசற்படிக்கு அருகில் வந்ததும் "சூரியா! என் தலைமேல் ஆணை நாளைக்குக் கட்டாயம் எனக்கு டெலிபோன் பண்ணு!" என்று மெதுவான குரலில் கூறினாள்.

"சரி, அத்தங்கா!" என்றான் சூரியா.

## பதின்மூன்றாம் அத்தியாயம்

## "பதிவிரதையானால்?..."

**வா**சல் வரையில் சூரியாவைக் கொண்டுபோய் விட்டு விட்டுச் சீதா திரும்பி உள்ளே வந்தாள். உட்கார்ந்திருந்த ராகவன் ஆக்ரோஷத்தோடு எழுந்து நிற்பதைக் கண்டாள்.

"அவனிடம் என்னடி இரகசியம் பேசினாய்?" என்று ராகவன் கண்களில் தீப்பொறி பறக்கக் கேட்டான்.

இன்னது சொல்கிறோம் என்பதை நன்கு உணராமலேயே "நான்

என்ன பேசினுல் உங்களுக்கு என்ன?" என்று கூறினுள் சீதா.

"என்ன சொன்னுய்?... எனக்கு என்னவா?" என்று சொல்லி ராகவன் சீதாவின் கன்னத்தில் பளீரென்று ஒரு அறை அறைந்தான்.

சீதா பல்லைக் கடித்து வலியைப் பொறுத்துக் கொண்டு, "இவ்வளவு தானு? இன்னொரு கன்னம் பாக்கி இருக்கிறது!" என்ருள்.

"ஓகோ! அப்படியா? காந்தி மகாத்மாவின் சிஷ்யை ஆகிவிட்டா யாக்கும்! இந்தா! வாங்கிக் கொள்!" என்று இன்னொரு கன்னத்திலும் அறைந்தான்.

சீதா அவனை வெறிக்கப் பார்த்து விட்டுச் சமையலறைக்குள் போனுள்.

"எங்கே அவசரமாய்ப் போகிருய்? இங்கே வா! கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லிவிட்டுப் போ!" என்று ராகவன் கத்தினுன்.

சமையல் உள்ளேயிருந்த டம்ளரில் ஓவல்டின் எடுத்துக்கொண்டு வந்து சீதா மேஜைமீது வைத்தாள்.

"வெறும் ஓவல்டினு? அல்லது விஷத்தைக் கலந்து கொண்டு வந்தாயா?" என்று ராகவன் கேட்டான்.

"ஆமாம்!" என்ருள் சீதா.

"அப்படியானுல் நீயே சாப்பிடு...! வேண்டாம்! உனக்கும் இந்த உலகத்தில் வேலை கொஞ்சம் பாக்கி யிருக்கிறது! இவ்வளவு சீக்கிரத்தில் உலகத்தை விட்டுப் போய் விடாதே!" என்று சொல்லிக்கொண்டே ராகவன் டம்ளரைக் கையிலெடுத்து அதிலிருந்த ஓவல்டின் பானத்தை ஜன்னல் வழியாக வீசிக் கொட்டினுன்.

"இப்பேர்ப்பட்ட தொலைபாதகியை வீட்டில் வைத்துக் கொண்டு நீங்கள் கஷ்டப்பட வேண்டாம். நாளைக்கு நானே புறப்பட்டுப் போய் விடுகிறேன்" என்ருள் சீதா.

"எங்கே போவதாக உத்தேசம்?" என்ருன் ராகவன்.

"போகிறவள் எங்கே போனுல் உங்களுக்கு என்ன? நீங்கள் ஏன் கேட்கவேண்டும்?" என்ருள் சீதா.

"உனக்கு நான் தாலி கட்டிய புருஷனுயிருக்கிறபடியினுல்தான் கேட்கிறேன். முன்னே நான் போகச் சொன்னபோதெல்லாம் 'போக மாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்தாய். இப்போது நாளைக்கே போகிறேன் என்கிருயே? எங்கே போவதாக உத்தேசம்? யாருடன் போவதாக உத்தேசம்? சூரியாவுடனு?"

"சூரியா அழைத்துக் கொண்டு போனுல் அவனுடன் போகிறேன். இல்லாவிட்டால் தனியாகப் போகிறேன்" என்ருள் சீதா.

"சூரியா உன்னை எங்கே அழைத்துப் போகப் போகிருன்? அவன்தான் நித்தியகண்டம் பூர்ணயுஸாகப் போலீஸுக்குப் பயந்து பயந்து ஒளிந்து திரிகிருனே? நீ தனியாகத் தான் போகும்படி யிருக்கும். எந்த ஊருக்குப் போகப் போகிருய்?"

"எங்கேயாவது தொலைந்து போகிறேன் நீங்கள்தான் வாய் ஓயாமல் தொலைந்து போ என்கிறீர்களே?"

"இப்போதும் அதைத்தான் சொல்கிறேன். திவ்யமாய்த் தொலைந்து போ! போவதற்கு முன்னுலே நான் கேட்கும் கேள்விக்கு மட்டும் பதில் சொல்லிவிட்டுப் போ!"

"தொலைந்து போகப் போகிறவளிடம் கேள்வி என்ன கேட்பது? பதில் என்ன சொல்வது?"

"பதில் சொல்லத்தான் வேண்டும். உன்னையும் சூரியாவையும் பற்றி எனக்குச் சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது."

"என்ன சந்தேகம்?"

"என்ன சந்தேகமா? உங்களுடைய நடத்தையைப் பற்றிய சந்தேகந்தான்."

"ரொம்ப சந்தோஷம்"

"சந்தோஷமா?" என்று சொல்லி ராகவன் சீதாவின் ஒரே கன்னத்தில் இன்னும் இரண்டு பலமான அறை கொடுத்தான்.

சீதா அவ்விடமிருந்து நகரவும் இல்லை; கண்ணீர் விடவும் இல்லை; முகத்தைச் சுருக்கக்கூட இல்லை.

"ரொம்ப சந்தோஷம். என்னை ஒரே அடியாக அடித்துக் கொன்று விடுங்கள்!" என்ருள்.

"எதற்காகக் கொல்ல வேண்டும் என்கிருய்?" என்ருன் ராகவன்.

"கொன்று விட்டால் நாளைக்கு நான் ஓடிப் போகவேண்டிய அவசியமிராது" என்ருள் சீதா.



"உன் மனதில் ஏதோ களங்கம் இருக்கிறது. குற்றமுள்ள நெஞ்சு அடித்துக் கொள்கிறது. ஆகையினால் தான் 'ஓடிப் போகிறேன்' 'ஓடிப் போகிறேன்' என்று சொல்கிறாய்."

"பொய்! என் மனதில் களங்கமும் இல்லை; நெஞ்சில் குற்றமும் இல்லை."

"பின் எதற்காக 'ஓடிப் போகிறேன்' என்கிறாய்? கட்டிய புருஷனை விட்டு விட்டு ஏன் ஓடவேண்டும்?"

"உங்களுடைய மனது வேற்றுமைப் பட்டுவிட்டது. இனிமேல் நமக்குள் ஒட்டாது. மனது ஒட்டாதவர்கள் எப்படிச் சேர்ந்து வாழ முடியும்?"

"என் மனது வேற்றுமைப் பட்டு விட்டது என்றால், அதற்குக் காரணம் உன்னுடைய நடத்தைதான். நான் இல்லாத சமயம் பார்த்துச் சூரியா எதற்காக உன்னைப் பார்க்க வருகிறான்? இதோ பார்! நீ உண்மையில் பதிவிரதையாக இருந்தால்......?"

"பதிவிரதையாக இருந்தால்......? கடவுளே! இது என்ன விசித்திர உலகம்?" என்றாள் சீதா.

"மாயா உலகத்தைப் பற்றிய வேதாந்தப் பேச்செல்லாம் அப்புறம் இருக்கட்டும். நீ பதிவிரதையாயிருந்தால் நான் இப்போது சொல்லப் போகிறதைச் செய்ய வேண்டும். செய்வாயா?" என்றான் ராகவன்.

சீதா மௌனமாக இருந்தாள்.

"நான் சொல்லுவதைச் செய்வாயா? மாட்டாயா? சொல்லு பதில்!" என்று ராகவன் அதட்டினான்.

"இன்ன காரியம் என்று தெரியப் படுத்தினால் முடியும், முடியாது என்று சொல்லுகிறேன்!"

"காரியத்தை முதலில் சொல்ல முடியாது. நான் எது சொன்னாலும் நீ செய்யத் தயாராயிருக்க வேண்டும். இல்லாவிட்டால், இந்த வீட்டை விட்டு நடந்துவிட வேண்டும்."

"நான்தான் போகத் தயார் என்று சொல்லி விட்டேனே? இந்த நிமிஷமே வேண்டுமானாலும் கிளம்பி விடுகிறேன்."

"ஆனால் நான் சொன்னதை மட்டும் செய்யமாட்டாயாக்கும்!"

"இன்ன காரியம் என்று சொல்லாமல் எப்படிச் செய்வதாக ஒப்புக் கொள்ள முடியும்?"

"ஏன் முடியாது? புருஷன் சொல்வது எதுவானாலும் செய்ய வேண்டியது மனைவியின் கடமை யல்லவா?"

"அன்யோன்ய தம்பதிகளா யிருந்தால் சரிதான். ஆனால் உங்கள் மனம் பேதலித்து விட்டது. என் பேரில் உங்களுக்குச் சந்தேகம்; உங்கள் பேரில் எனக்குச் சந்தேகம். அப்படியிருக்கும்போது காரியம் இன்னதென்று தெரியாமல் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்?"

"என் பேரில் உனக்குச் சந்தேகமா? அழகாய்த்தானிருக்கிறது. அப்படியே இருக்கட்டும். நீ செய்ய வேண்டியதைச் சொல்கிறேன். இப்போதே, — இந்த நிமிஷமே, — போலீஸ் ஸ்டேஷனை நீ டெலிபோனில் கூப்பிட்டு, சூரியா இங்கு வந்துவிட்டுப் போனதை அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும்."

"ஒருநாளும் மாட்டேன்."

"ஏன் மாட்டாய்? சூரியா பேரில் உனக்கு என்ன அத்தனை கரிசனம்?"

"சூரியா என்னுடைய மாமாவின் பிள்ளை. என் பேரில் அவனுக்கு எவ்வளவோ அபிமானம். நம் இருவருக்கும் கலியாணம் பண்ணி வைத்ததே அவன் தான். இப்போது சூரியா தேச விடுதலைக்காகப் பாடுபட்டு வருகிறான். என்னிடமும் உங்களிடமும் நம்பிக்கை வைத்து, நாம் காட்டிக் கொடுக்க மாட்டோம் என்று உறுதியாக நம்பி அவன் என்னைப் பார்க்க வந்தான். அவனைப் போலீஸுக்குக் காட்டிக் கொடுப்பது துரோகம்; மகா பாவம்" என்றாள் சீதா.

"உன்னுடைய அம்மாஞ்சி சூரியாவினால் எனக்குப் பெரிய ஆபத்து வந்திருக்கிறது. புரட்சி வேலைகளில் அவன் ஈடுபட்டவன். அப்படியிருக்கும் சர்க்கார் உத்தியோகஸ்தனுடைய என் வீட்டுக்கு அவன் வந்தது பெரும் பிசகு. அதனால் எனக்கு உத்தியோகத்தில் பிரமோஷன் தடைப்பட்டு விட்டது. எனக்குக் கீழே இருந்தவர்கள் எல்லாரும் எனக்கு மேலே போய் விட்டார்கள். இன்றைக்கு அவனை நான் பிடித்துக் கொடுக்காவிட்டால், போலீஸுக்குத் தகவலாவது கொடுக்காவிட்டால் என்னுடைய உத்தியோகமே போனாலும் போய் விடும்."

"போனால் போகட்டும். உத்தியோகத்துக்காகச் ஸ்நேகத் துரோகமான இந்தக் காரியம் செய்ய வேண்டாம். நான் வீடு வீடாகப் பிச்சை எடுத்தாவது ஏதோ கொண்டு வருகிறேன்."

"சீ! நாயே! உன்னுடைய பிச்சைக் காசை எதிர்பார்த்து நான் ஜீவிக்க வேண்டுமாக்கும்! அதெல்லாம் முடியாது. உன்னுடைய மூடத்தனத்துக்காக இரண்டாயிரம் ரூபாய் சம்பளமுள்ள உத்தியோகத்தை விட்டுவிடச் சொல்கிறாயா? ஒரு நாளும் மாட்டேன். இந்தச் சங்கடம் குறுக்கிடாவிடில் சீக்கிரத்தில் இன்னும் பெரிய உத்தியோகம் எனக்குக் கிடைக்கும். மாதம் மூவாயிரம் நாலாயிரம் சம்பளம் வரும். அதையெல்லாம் விட்டுவிடச் சொல்கிறாயா? உன்னுடைய புத்தி உலக்கைக் கொழுந்து தான்."

"அப்படியே இருக்கட்டும். ஆனால் நான் போலீஸுக்கு ஒரு நாளும் தகவல் சொல்ல மாட்டேன். அதைக் காட்டிலும் உயிரையே விட்டு விடுவேன்."

"எனக்குத் தெரியுமே? உன்னுடைய யோக்கியதை வெளியாகட்டும் என்றுதான் உன்னைப் 'போன்' பண்ணச் சொன்னேன். வெளியாகி விட்டது. இங்கே நிற்காதே! போ! தொலை!" என்று சீதாவின் கழுத்தைப் பிடித்துப் படுக்கையறைப் பக்கமாக அவளை ராகவன் தள்ளினான்!

சீதா படுக்கையறைக்குள் சென்று படுத்துக் கொண்டாள். கண்களில் ஒரு சொட்டு ஜலம்கூட வரவில்லை. கன்னத்தில் கணவன் அடித்த இடத்தில் விண் விண் என்று தெறித்துக் கொண்டிருந்தது. இன்று நடந்ததெல்லாம் உண்மையா அல்லது தூங்கும் போது கனவு கண்டோமா என்று வியந்தாள்.

ராகவன் இருந்த அறையில் டெலிபோன் கருவியை 'டயல்' செய்யும் சத்தம் கேட்டது. உடனே சீதாவின் காதுகள் கூர்மையாயின; அவளது உள்ளம் ஒருமுகப்பட்டது.

"ஹலோ! போலீஸ் ஸ்டேஷனா?" என்ற ராகவனுடைய குரல் காதில் கேட்டதும் சீதா பளிச்சென்று எழுந்து ஓடி வந்தாள். டெலிபோன் ரிஸீவரை வைத்திருந்த ராகவன் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "யாருக்கு டெலிபோன் செய்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

கோபத்தினால் முகம் கறுத்துக் கண்கள் சிவந்து கொடூரமாய் விழித்த

ராகவன் "உனக்கு என்ன அதைப் பற்றி? விடு கையை!" என்றான்.

"எனக்கு ஏன் சம்பந்தம் இல்லை? நீங்கள் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போன் பண்ணப் போகிறீர்கள் சூரியாவைப் பற்றி. அதற்கு நான் ஒரு நாளும் விடமாட்டேன். என்னைக் கொன்று விட்டு டெலிபோன் செய்யுங்கள்" என்றாள் சீதா.

"நானைக்கு நான் ஆபீஸிலிருந்து டெலிபோன் பண்ணினால் என்ன செய்வாய்?" என்றான் ராகவன்.

"அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. என் காதல் விழாதிருந்தால் சரி" என்றாள் சீதா.

"சூரியாவிடம் உனக்கு என்ன அவ்வளவு அக்கரை? உனக்கும் அவனுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை என்று சொன்னாயே?"

"அப்படி நான் சொல்லவில்லை. இந்த உலகத்திலேயே சூரியா ஒருவன்தான் என்பேரில் அபிமானம் உள்ளவன். எனக்காக எதுவேணுமானாலும் செய்யத் தயாராயிருப்பவன். அவனை நீங்கள் காட்டிக் கொடுப்பதை நான் எப்படிப் பார்த்துக் கொண்டிருக்க முடியும்?" என்று சீதா கேட்டாள்.

"அடி பாதகி! சூரியாவின் மோகம் உன்னை எவ்வளவு தூரம் பைத்தியமாக்கியிருக்கிறது என்று இப்போதல்லவா தெரிகிறது?"

"ரொம்ப சந்தோஷம்."

"என்ன சந்தோஷம்? என்ன சந்தோஷம்?" என்று சொல்லிக் கொண்டு கையை ஓங்கினான் ராகவன்.

"இவ்வளவு படுபாதகமான விஷயத்தைச் சொல்லியும் உங்கள் நாக்கு அறுந்துவிழாததுபற்றிச் சந்தோஷம்."

"என் நாக்கு அறுந்துவிழ வேண்டுமா? சாபம் வேறு கொடுக்கிறாயா?" என்று சொல்லிக் கொண்டே மிதமிஞ்சிய கோபாக்ரோசத்துடனிருந்த ராகவன், டெலிபோன் ரிஸீவரை வைத்திருந்த கையினாலேயே ஒரு அடி அடித்தான். அந்த அடி சீதாவின் காதின்மேல் விழுந்தது.

அவ்வளவுதான்; சீதாவின் முகத்தில் திடீரென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. கண்களில் நீர் ததும்பிற்று. அடித்த காதைக் கையினால் பொத்திக் கொண்டாள். "அம்மா! அம்மா! அலை ஓசை கேட்கிறதே! அம்மா! என்னை அழைத்துக் கொண்டு போ அம்மா!" என்று விம்மலும் அழுகையுமாகக் கதறினாள். முகத்திலும் கண்களிலும் வெறி தாண்டவமாடியது! சீதாவுக்கு 'ஹிஸ்டீரியா' வந்துவிட்டது என்று ராகவன் உணர்ந்தான்.

உடனே அவளை மெதுவாகப் பிடித்து ஸோபாவில் உட்கார வைத்தான். தானும் பக்கத்தில் உட்கார்ந்தான். "வேண்டாம், சீதா! வேண்டாம்! நான் உன்னைச் சோதனை பண்ணவா செய்தேன்? உண்மையென்று நினைத்துக் கொண்டாயா!" என்று சாந்தமான குரலில் பேசிக் கொண்டே முதுகிலே இலேசாகத் தட்டித் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தான்.

சற்று நேரத்துக்கெல்லாம் சீதா ஸோபாவில் குப்புறப் படுத்துக் கொண்டாள். விம்மலும் அழுகையும் நின்றது. சீதா நித்திரையில் ஆழ்ந்தாள்.

• • •

**வீ**ட்டுக்கு வெளியிலே சென்ற சூரியா, காம்பவுண்டு கேட்டின் கதவைத் திறந்து மூடிவிட்டு, மறுபடியும் தோட்டத்துக்குள் நுழைந்து வீட்டின் ஒரு ஓரமாகச் செடிகள் மரங்களின் மறைவில் சத்தமின்றி நடந்து வந்தான். ராகவனும் சீதாவும் இருந்த அறையின் ஜன்னலுக்கு அருகில் மறைவாக நின்று நடப்பதையெல்லாம் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டுமிருந்தான். பேசிய விஷயங்கள் எல்லாம் நன்றாகக் காதில் விழவில்லை. ஆனால் கண்கள் எல்லாவற்றையும் நன்கு பார்த்தன.

ராகவன் டெலிபோன் கட்டையால் சீதாவை அடித்ததையும் அவள் "அம்மா! அம்மா!" என்று அலறியதையும் பார்த்த பிறகு சூரியாவால் பொறுக்க முடியவில்லை. கைத்துப்பாக்கியை எடுத்துச் சுட்டுவிடலாமா என்று ஒரு கணம் நினைத்தான். ஆனால் அது தவறு என்றும் பல முக்கியமான காரியங்கள் பாக்கியிருப்பதால் இன்னும் ஒரு நாள் பொறுத்திருக்க வேண்டும் என்றும் தீர்மானித்தான். உடனே அங்கிருந்து சூரியா நடையைக் கட்டினான்.

நள்ளிரவுக்குப் பிற்பட்ட பின்னிரவில் பழைய டில்லி நகரத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்த சூரியாவின் உள்ளம் அன்று வரை இல்லாத மாதிரி கொந்தளித்தது. "தேசம் எப்படிப் போனால் என்ன? சுதந்திரம் எக்கேடு கெட்டால் என்ன? தேசத்தையும் சுதந்திரத்தையும் கவனிக்க எத்தனையோ பேர். ஆனால் சீதா அநாதை, திக்கற்றவள். சீதாவின் விருப்பத்தைப் பூர்த்தி செய்து அவளைச் சந்தோஷமாக வைப்பது தான் என்னுடைய முதற் கடமை. அந்தக் கடமையை எப்படி நிறைவேற்றுவது? நாளைக்குத் தாரிணியைக் கேட்டுக் கொண்டு தீர்மானிக்க வேண்டும். அது வரையில், பாவம், அந்த ராட்சதனிடம் அகப்பட்டுக் கொண்ட என் அத்தங்காள் உயிரோடு இருக்க வேண்டுமே!"

இத்தகைய சிந்தனைகளில் ஆழ்ந்த வண்ணம் சூரியா நடந்தான். போக வேண்டிய இடம் போய்ச் சேர்ந்து படுத்துக் கொண்ட பிறகும் தூக்கம் சரியாக வந்தபாடில்லை. அன்று அவனுக்குச் சிவராத்திரியாயிற்று.

# கலாநிதிக்குப் பாராட்டு

சங்கீத வித்வத் சபையின் இந்த வருஷத்துச் சங்கீத விழாத் தலைவரான சங்கீத கலாநிதி ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளையவர்களைப் பாராட்டுவதற்காக நிகழும் ஜனவரி 7-ந் தேதி இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர் ஸ்ரீ பிள்ளை அவர்களுக்கு ஒரு உபசார விருந்து நடத்தினார். மேற்படி விருந்துக்குச் சங்கீத வித்வான்களும், கலா ரஸிகர்களும், பிரமுகர்களும், பத்திரிகையாளரும் வந்திருந்தனர். மேயர் ஸ்ரீ ராமசாமி நாயுடு வைபவத்துக்குத் தலைமை வகித்தார்.



ஸ்ரீ டைகர் வரதாச்சாரியார், செம்பை ஸ்ரீ வைத்தியநாத பாகவதர், முசிரி ஸ்ரீ சுப்பிரமண்ய ஐயர், பேராசிரியர் ஸ்ரீ ஆர். சீனிவாசன், ஸ்ரீ வி. ராமானுஜாச்சாரியார், அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ ஐயங்கார் முதலியவர்கள் சங்கீத கலாநிதி ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளையவர்களின் வித்வத்தையும் குண விசேஷத்தையும் பாராட்டிப் பேசினர்.

மேயர் ராமசாமி நாயுடு வேறு அவசரமான அலுவலாகச் செல்லவேண்டி நேர்ந்ததால் "கல்கி" ஆசிரியர் அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கி முடிவுரையாக ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளைக்கு வாழ்த்துக் கூறினார். ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளையின் வயலின் வாசிப்பில் உள்ள இனிமையைக் "கல்கி" ஆசிரியர் பாராட்டி, "ஸ்ரீ பிள்ளையவர்கள் தமது நீண்ட கரங்களைச் சொர்க்க லோகம் வரையில் செல்லும்படி நீட்டி அங்குள்ள அமுத கலசத்திலிருந்து அமுதத்தை அள்ளிக் கொண்டு வந்து வயலின் மூலமாக அமுத மழை பொழிகிறார்கள்" என்றார்.

ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை மகிழ்ச்சி உரை கூறிய பின்னர், ஸ்ரீ தண்டபாணி தேசிகர் விழாவுக்கு வந்திருந்தவர்களுக்கெல்லாம் நன்றி தெரிவித்தார். ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரியின் இன்னிசை விருந்துடன் வைபவம் இனிது முடிந்தது.

அருமை பெருமை அறிந்தவர்கள்
எப்போதும் ஸ்டேன்ஸ்

**Stanes**

தேயிலையையே விரும்புகிறார்கள்




ஸ்டேன்ஸ் ஆரஞ்ச பீகோவும் ஸ்பெஷல் ப்ளெண்ட் தேயிலையும் புதிதல்ல. குணத்திலும் மணத்திலும் தலைசிறந்து எல்லாராலும் விரும்பப்படுபவை. ஆரஞ்ச பீகோ 1, ½, ¼ பவுண்டு பாக்கட்டுகளிலும் 5 lb. பெட்டிகளிலும் கிடைக்கும். ஸ்பெஷல் ப்ளெண்ட் 1 பவு. பாக்கட்டுகளில்

தி யுனைட்டட் காபி சப்ளை கம்பெனி லிட்.

மானேஜிங் ஏஜண்ட்ஸ்:

டி. ஸ்டேன்ஸ் அண்டு கம்பெனி லிட்., கோயமுத்தூர்



# வளரும் தமிழ்

## அபேதவாதம்

உலகத்திலுள்ள பல அநீதிகளுக்கும் அக்கிரமங்களுக்கும் காரணமாயிருப்பது சொத்துரிமை. மனிதனுடைய பாரமார்த்திக வாழ்க்கையும் சரி, ஆத்மார்த்திக வாழ்க்கையும் சரி — இது கெடுத்து விடுகிறது. இந்தச் சொத்துரிமையை நீக்கி நாட்டின் செல்வத்தையும் உழைப்பையும் அனைவருக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்க வேண்டுமென்பதுதான் பொதுவுடைமையின் நோக்கம்.

எந்த விஷயத்தையும் எல்லோருக்கும் புரியும்படி எடுத்துச் சொல்வதில் நிகரற்ற ராஜாஜி, பொதுவுடைமையைப் பற்றியும் சொல்லியிருக்கிறார். தபால் இலாகா, தண்ணீர் சப்ளை, வீதி விளக்கு, ஆஸ்பத்திரி ஆகியவை எல்லோருக்கும் பொதுவாயிருப்பது போல் மற்றவையும் பொதுவாயிருப்பது சாத்தியமே என்கிறார். அவர் சொன்னவற்றைத் தொகுத்து "அபேதவாதம்" என்ற தலைப்பில் சக்தி காரியாலயத்தார் ஒரு சிறு புத்தகம் வெளியிட்டிருக்கிறார்கள். புத்தகம் உருவத்தில் சிறிதாயிருந்தாலும் விஷயத்தில் பெரிதாயிருக்கிறது. இந்தப் புத்தகத்தைப் படிப்பவர்கள், "பொதுவுடைமை என்பது பேயோ பிசாசோ அல்ல; அது ஒரு வேதாந்தக் கொள்கை!" என்ற முடிவுக்குத்தான் வருவார்கள்.

## வீட்டுக்கு ஒரு ஆஸ்பத்திரி

அன்றாட வாழ்க்கைக்குப் போதிய ஊதியத்தைக்கூடச் சம்பாதித்துக் கொள்ள முடியாத நிலையில் எண்ணிறந்த மக்கள் நம் ஏழை இந்தியாவில் இருக்கிறார்கள். அவர்களுக்கு நோயும் வந்துவிட்டது என்றால் உருப்பட்ட மாதிரிதான். அவர்கள் டாக்டரிடம் போய்க் கை காட்டுவதற்கு முன்னால், பணத்துக்கு யாரிடமாவது கை நீட்டியாக வேண்டும். அவர்களுக்கெல்லாம் செலவில்லாமல் வீட்டுக்கு ஒரு ஆஸ்பத்திரி இருந்தால் மிகவும் அநுகூலமாயிருக்குமல்லவா? அந்த வழியை டாக்டர் எஸ். வி. ராஜையா எழுதிய இந்த நூல் சொல்லுகிறது.

தற்போது சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் கையாளப்பட்டு வரும் வைத்திய முறைக்கு 'அல்லோபதி' என்று பெயர். மேனாட்டில் 'ஹோமியோபதி' என்னும் வேறொரு வைத்திய முறையும் கையாளப்படுகிறது.

ஹோமியோபதியின் வரலாறு, ஹோமியோபதி மருந்துகள் தயாரிக்கும் முறை, அதை அநுஷ்டானத்துக்குக் கொண்டு வரும் விதம், வியாதிகளை எப்படி அறிந்து கொள்ளுவது, வியாதிகளின் அறிகுறிகள், அவற்றின் பரிகாரம் முதலிய விஷயங்களெல்லாம் ஆராய்ச்சியுடன் எழுதப்பட்டிருக்கின்றன.

## ஆடு சிரித்தது!

சிலந்திக் கூட்டில் சிக்கிக் கொண்ட ஈயைச் சிலந்தி கபளீகரம் செய்து விட்டது. இதைப் பார்த்துக் கொண்டிருந்த கரி "ஒருவரை யொருவர் ஏமாற்றி அடித்துத் தின்பதே தொழிலாகி விட்டது!" என்று பூனையிடம் சொல்லி அநுதாபப் பட்டது. ஆனால் அடுத்த கணம் அங்கு வந்த கோழியின் மேல் பாய்ந்தது கரி. "நீ பிறருக்குத் தான் குருவா?" என்று பூனை கரியைப் பார்த்துக் கேட்டது. அச்சமயம் அங்கே ஒரு எலி குறுக்கே ஓடியது. பூனை எலியின் மேல் பாய்ந்தது. இவற்றை மறைவிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த ஆடு சிரித்தது. அந்த ஆட்டை அதன் எஜமானன் வெட்டுவதற்குக் கொண்டு போனான். இளம் மாணவர்களின் நெஞ்சில் சுலபமாய்ப் பதியக் கூடிய முறையில் அறிவோதயம் அளிக்கும் இக்கதை நாமக்கல் கவிஞர் எழுதியது.

## 1. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்
## 2. ஸ்ரீ தேவி ஸ்தோத்ர ரத்னாகரம்

நாம பஜனை செய்து நாராயணனின் திருவருளுக்குப் பாத்திரமாக விரும்பும் பக்த சிரோமணிகள் பேராவலுடன் பாராயணம் செய்வதற்கு ஏற்றதாக ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம் வெளிவந்திருக்கிறது.

அண்ட சராசரங்களை ஈன்ற அன்னை பராசக்தி, காமாக்ஷி, மீனாக்ஷி, திரிபுரசுந்தரி முதலிய பல்வேறு நாமரூபங்களுடன் பக்தர்களின் விருப்பத்துக்கு ஏற்பத் தரிசனம் தந்தார். தேவியின் அவதார மகிமைகளை விளக்கும் முறையில் ஆதிசங்கரர் அருளிய ஸ்தோத்ரங்கள் ஸ்ரீ தேவி ஸ்தோத்ர ரத்னாகரத்தில் அடங்கியிருக்கின்றன. இவை காஞ்சி காமகோடி பீடத்தின் பிரசுரங்கள்.

# பெற்ற மனம்

எஸ். விஜயராகவன்

வாசலில் "தபால்!" என்ற குரல் கேட்டதும் ஆபீஸ் போவதற்குத் தயார் செய்து கொண்டிருந்த சாரங்கன் ஓடோடியும் சென்று ஒரு கடிதத்தைக் கையில் வாங்கி வந்தான்.

"யாருடா போட்டிருக்கா? பம்பாயிலிருந்து சீனு போட்டிருக்கானா?" என்று கேட்டபடியே நான் அவனை நெருங்கினேன்.

"ஆமாம்" என்று ஒரு மாதிரியாகச் சாரங்கன் முணுமுணுத்தானே தவிர, சீனுவிடமிருந்து கடிதம் வரும்போதெல்லாம் அவன் முகத்திலே பாய்ந்தோடும் வழக்கமான சந்தோஷக் குறியைக் காணவில்லை.

அதற்குள், "அம்மா பேருக்கு ஒரு 'மணி ஆர்டர்' கூட இருக்குதுங்க!" என்றபடி தபால்காரன் மறுபடியும் உள்ளே வந்தான்.

"அம்மா! சீனு உனக்குப் பணம் அனுப்பியிருக்கிறான்; கையெழுத்தைப் போட்டு வாங்கிக் கொள்!" என்றான் சாரங்கன்.

அப்போது அவனது குரலில் தொனித்த ஆத்திரம் என்னை என்னவோ செய்தது.

"பணமா! எனக்கா! இது என்ன புதுசாயிருக்கு?" என்றபடி யந்திரம்போல் கையெழுத்தைப் போட்டுப் பணத்தைக் கையில் வாங்கிக் கொண்டேன்.

இதை யெல்லாம் கோபக் கண்களுடன் நோக்கிய சாரங்கனது செய்கையின் அர்த்தம் எனக்கு விளங்கவே யில்லை.

"சாரங்கா! இந்தா, இதை எடுத்து வை. அதிருக்கட்டும்; கடிதம் ஒன்று வந்ததே, அதில் சீனு என்ன எழுதியிருக்கிறான்? அவன் சௌக்கியம்தானே?" என்று கேட்டேன்.

"அவன் சௌக்கிய மென்றுதான் எழுதியிருக்கிறான்; அதோடில்லாமல் என்னை உதைத்துக் காட்டுவதற்கும் போதிய பலத்தோடு மிருக்கிறான்!" என்றான் சாரங்கன் ஆத்திரத்துடன்.

"உனக்கென்னடா, இவ்வளவு கோபம்? எனக்கு ஒண்ணுமே புரியலையே!"

"உனக்கு எப்படிப் புரியும்? அவன் தான் உனக்கு உசத்தி அது எப்படியோ போகட்டும்; அவன் அனுப்பும் பிச்சைக் காசை நான் தொடப் போவதில்லை. அவனுடைய உதவி இல்லாவிட்டால் நான் குழந்தை குட்டிகளுடன் மடிந்து விடுவேனா என்ன? மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்!" என்று கத்திக் கொண்டே வெளியே போய்விட்டான் சாரங்கன்.

எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. மெல்ல எழுந்து சாரங்கனின் மேஜையண்டை போனேன். நல்ல வேளையாகச் சீனு போட்ட கடிதம் அங்கேயே கிடந்தது. அதை எடுத்து நாட்டுப்பெண் ராஜத்திடம் கொடுத்துப் படிக்கச் சொன்னேன்.

"...குடும்பச் செலவுகள் அதிகமாகி வருவதன் காரணமாக உனக்கு இனிமேல் வழக்கப்படி மாதா மாதம் பணம் அனுப்ப முடியாதற்கு வருந்துகிறேன். யுத்தம் முடிந்துவிட்டதால் பல கம்பெனிகள் எங்களுக்கு இதுவரையில் கொடுத்து வந்த யுத்தப்படி, பஞ்சப்படி முதலியவற்றையும் குறைத்து விட்டார்கள். இருந்தாலும் குடும்பத்தை நீ சமாளித்துக் கொள்வாய் என்று நம்புகிறேன்......"

ராஜம் கடிதத்தைப் படித்துக் காட்டிவிட்டு உள்ளே போய்விட்டாள். என் மனம் மட்டும் எதை எதையோ நினைத்து உருகிக் கொண்டிருந்தது. என்னை யறியாமல் என் கண்களில் நீர் துளித்து வழிந்தோடியது.

எனக்கு எதற்குப் பணம்? அன்பு நிறைந்த பிள்ளை, பதவிசுடனும் வாத்சல்யத்துடனும் வீட்டுக்கே லட்சுமிகரமாய் விளங்கும் நாட்டுப் பெண், இன்ப விளையாட்டுகள் விளையாடி என்னை எப்போதும் மகிழ்விக்கும் இரு பேரக் குழந்தைகள்—இவை இருக்கையில் கேவலம் இந்தப் பணமா எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கப் போகிறது?

ஒருவேளை என் மூத்த குழந்தை—ஊர் விட்டு ஊர் சென்று சம்பாதிக்கும் குழந்தை—தன் அன்பு நிறைந்த மரியாதையைக் காட்டுவதற்காகத்தான் இந்தப் பணத்தை என் பேருக்கு அனுப்பினானோ, என்னவோ?

சீனுதான் என் பேருக்கு ஏதோ ஒரு காரணத்தால் பணம் அனுப்பிவிட்டான் என்றால் சாரங்கனுக்கு ஏன் இவ்வளவு ஆத்திரம்? இதுவரை அவன் பேருக்கே மாதா மாதம் அனுப்பிவந்தவன் இனிமேல் அனுப்ப முடியாது என்று சொல்லிவிட்டதால்தான் கோபமோ?

எத்தனை காலைக்குத்தான் இவன் அவனிடமிருந்து உதவியை எதிர்பார்க்க

முடியும்? அவன் குடும்பமும்தான் பெருகிக்கொண்டே வருகிறது.

இவ்விதம் ஏதேதோ எண்ணி யெண்ணி மனதைப் புண்ணாக்கிக் கொண்டே நாட்களைக் கழித்துவிட்டேன். என் கையிலிருந்த பணத்தை வாங்கிக் கொள்ளத் தீர்மானமாக மறுத்துவிட்டான் சாரங்கன்.

சில நாட்களுக்கு முன் என்னுடைய நாட்டுப்பெண் ராஜம் தனக்குப் புடவை இல்லை என்று சொன்னது ஞாபகத்திற்கு வந்தது. எனவே, "ராஜம்! புடவை இல்லை என்று சொன்னாயே! சாயந்திரம் வா; கடைக்குப் போகலாம்" என்றேன்.

ஆனால் அவளோ எதிர்பாராத விதமாக, "எனக்கு ஒன்றும் புடவை வேண்டாம், அம்மா! நான் கடைத்தெருவுக்கு வரவில்லை" என்று கூறிவிட்டாள்.

நியாயமோ, அநியாயமோ கணவன் வழியைத்தானே மனைவியும் பின்பற்றுகிறாள்!

அன்று குழந்தைகளுக் கென்று பொம்மைகள், தின்பண்டங்கள் எல்லாம் கொஞ்சம் வாங்கி வந்தேன் நான். என் பேரனும், பேத்தியும் அவற்றைக் கண்டு ஆனந்தங் கொண்டு துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தனர். அப்போது அங்கு வந்த ராஜம், "என்னத்திற்கு அம்மா, இதையெல்லாம் வாங்கிக் கொடுத்துப் பழக்கப் படுத்துகிறீர்கள்?" என்று வெடுக்கென்று கேட்டாள்.

"அப்பப்பா! என்ன அதிசயம்! ராஜத்தின் இயற்கையான அடக்கம், மரியாதை எல்லாம் கூடப் பறந்து போய் விட்டதே!" என்று எண்ணித் திகைத்து நின்றேன்.

அதற்குள், "என்ன இது, ரகளை?" என்று கேட்டவண்ணம் அங்கே வந்தான் சாரங்கன்.

"உங்க அம்மாவைப் பாருங்கோ! இதையெல்லாம் வாங்கிக் கொடுத்துப் புதுப் பழக்கம் செய்கிறார்!" என்றாள் ராஜம்.

"ஏனம்மா, கண்டதையெல்லாம் வாங்கிக் கொடுத்துக் குழந்தைகளைக் குட்டிச் சுவராக்குகிறே?" என்று கத்திவிட்டுச் சென்றான் சாரங்கன்.



இதற்குப் பதிலளிக்க எனக்குத் தெரியவில்லை. மறுபடியும் அமைதி யற்றுத் தவித்தது என் கிழ உள்ளம்.

★

சீனு பம்பாய்க்குச் சென்று விளையாட்டுப்போல் பத்து வருஷங்களாகி விட்டன. அவன் அங்கு போனவுடனேயே அதிர்ஷ்ட வசமாய் நல்ல உத்தியோகம் கிடைத்து விட்டது. அவன் தான் வேலை செய்யும் ஆபீஸ் மானேஜரின் அன்பைப் பெற்றது மல்லாமல், அவரது கிளி போன்ற இளம் பெண் கமலாவின் மனதையும் கவர்ந்து விட்டான்.

சீக்கிரத்திலேயே அவனுக்கும் கமலாவுக்கும் கல்யாணமாகிற்று. சீனுவும் பம்பாயிலேயே ஜாகை வைத்துக் கொண்டான்.

ஆனால் நான் மட்டும் காவேரிக் கரையிலுள்ள எங்கள் சொந்த ஊரான திருவிடைமருதூரில் சாரங்கனுடன் இருந்தேன். சீனு வருஷத்திற்கு ஒரு முறை வந்தால் தான் உண்டு; இல்லாமற் போனால் 'தாய்—தனயன்' என்ற எங்கள் தொடர்பு வெறும் கடிதத்துடன்தான்!

எத்தனையோ தடவை என்னைப் பம்பாய்க்கு வருமாறு அழைத்திருக்கிறான் சீனு.

ஆனால் இத்தனை நாளாகச் சேர்ந்திருந்த சாரங்கன், ராஜம், குழந்தைகள்—இவர்களை விட்டுச் செல்ல எனக்கு மனம் வருவதில்லை.

இவ்வாறு இனை பிரியாமல் இது வரை இருந்து வந்த எனக்கு இந்தப் பண விஷயம் மிகுந்த கலவரத்தைக் கொடுத்து விட்டது. இதற்குப் பிறகு நான் அந்த வீட்டில் தொடர்பற்ற ஒரு புது மனுஷியைப் போலவே இருப்பதாக உணர்ந்தேன். ஒரு நாள் என் மனம் அளவு கடந்து கஷ்டப்படவே, அடுத்த வீட்டு ராமுவிடம் சென்று சீனுவுக்கு ஒரு கடிதம் எழுதித் தரச் சொன்னேன். அதில் கொஞ்ச காலம் நானும் பம்பாய் வந்து அவனுடன் தங்கி யிருக்க விரும்புவதாக எழுதச் சொன்னேன்.

நான்கு நாட்களுக்கெல்லாம் சீனு பம்பாயிலிருந்து புறப்பட்டுத் திருவிடைமருதூர் வருவதாகத் தந்தி வந்தது. அப்போதுதான் சாரங்கனுக்குக் கொஞ்சம் அதிர்ச்சியாக இருந்தது.

சீனுவும் வந்து சேர்ந்தான். வீட்டில் ஒரே குதூகலம். பம்பாயிலிருந்து புதுப்புதுப் பண்டங்களாக அவன் என்னவெல்லாமோ வாங்கி வந்திருந்தான்.

"சாரங்கா! நான் அம்மாவைக் கொஞ்ச நாளைக்குப் பம்பாய்க்கு அழைத்துப் போகிறேன். உனக்கு ஒன்றும் கஷ்டமில்லையே?" என்று கேட்டான் சீனு.

"எனக்கென்ன கஷ்டம்? நன்றாக அழைத்துப் போ! அவளுக்கும் மூத்த பிள்ளை, நாட்டுப்பெண், பேரக் குழந்தைகள் எல்லோரையும் பார்க்க வேண்டுமென்று ஆசை இருக்காதா, என்ன?" என்றான் சாரங்கன்.

நானும் சீனுவும் அன்று பம்பாய்க்குக் கிளம்புவதென்று தீர்மானித்தோம். வாசலில் வண்டி வந்து நின்றது. சாமான்களையெல்லாம் வேலையாள் கொண்டு போய் வண்டியில் வைத்துக் கொண்டிருந்தான்.

நான் உள்ளே சென்று, "ராஜம்! ஜாக்கிரதையாக இரு. குழந்தைகளுக்கெல்லாம் வாரம் தவறாமல் எண்ணெய் தேய்த்து விடு. சாரங்களையும் வேளா வேளையில் சாப்பிடச் சொல்லு. வீட்டைக் கவனித்துக் கொள். நான் போய் வருகிறேன்" என்றேன்.

அப்போது ஏனோ என்னை யறியாமல் என் கண்களில் நீர் துளித்து விட்டது.

★

**ப**ம்பாய் மாதுங்காவில் இருந்த சீனுவின் வாசஸ்தலம் மிகவும் அடக்கமாக இருந்தது. என் பெரிய நாட்டுப் பெண் கமலாவும் என்னிடம் எல்லையற்ற அன்பு காட்டிச் சகல சௌகரியங்களையும் செய்து கொடுத்துக் கொண்டிருந்தாள்.

இருந்தாலும் அன்று நான் புறப்பட்டு வரும்போது கண்ணீரும் கம்பலையுமாய் நின்ற ராஜத்தின் மதிவதனத்தை என்னால் மறக்க முடியவில்லை. அழுது, அழுது என்னைப் பிரிய மறுத்த இளம் குழந்தைகளின் நினைவும் என் உள்ளத்தை விட்டு அகலவில்லை.

இங்கே சீனுவுக்கும்தான் இரண்டு குழந்தைகள் இருந்தன. ஆனால் நான் எவ்வளவுதான் அவற்றைக் கொண்டாட முயன்றாலும் என்னிடம் அவை அண்டுவதில்லை. இது வரை கமலாவினாலேயே வளர்க்கப்பட்டு வளர்ந்த அக் குழந்தைகள் உள்ளே வரும்போதெல்லாம், "அம்மா!" என்று கூவிக் கொண்டு அவளிடம்தான் சென்றன.

அந்தக் குழந்தைகளைப் பொறுத்த வரை நான் அவ்வீட்டிற்கு ஒரு புது மனுஷியாகவே இருந்தேன்.

இதைத் தவிர மற்றொரு விஷயமும் என் உள்ளத்தை அரித்துக் கொண்டிருந்தது. சீனுவை நான் பத்து வருஷங்களுக்கு முன்னால் இருந்தது போல் கற்பனை செய்து வைத்திருந்தேன். இப்போது அவனிடம் காணப்பட்ட எண்ணற்ற மாறுதல்கள் எனக்கு அதிசயமாகவே இருந்தன.

'தாய்—தனயன்' என்ற தொந்தத்தின் காரணமாக எங்களைப் பிணைத்து வைத்திருக்கும் வாஞ்சையைத் தவிர மற்ற எதி

## மூக்கு உடைந்தது!

●

ஒரு சினிமா டைரக்டர் ஒரு சினிமாக் கதாசிரியரைப் பார்த்து, "நீங்கள் எழுதியிருக்கும் கதை ரொம்ப நன்றாயிருக்கிறது. சினிமாவுக்கு 'ஏற்ற கதை.' இந்தக் காலத்துக்கு ரொம்பப் பொருத்தமானது. அதை உங்களுக்காக யார் எழுதிக் கொடுத்தது?" என்று கேட்டார்.

கதாசிரியர் சிரித்துக் கொண்டே, "ரொம்ப சந்தோஷம். உங்களைப் போன்ற இவ்வளவு பெரிய டைரக்டர் என் கதையைப் பாராட்டுவது ஒரு பெரிய பாக்கியம்—அது இருக்கட்டும். அந்தக் கதையை உங்களுக்காக யார் படித்துக் காட்டியது?" என்று கேட்டார்.

னும் எங்களுக்குள் ஒற்றுமை காணப்படவில்லை. முன்பெல்லாம் எதற்கும் என்னுடைய புத்திமதியைக் கேட்பான் அவன்; இப்போதோ விஷயம் முற்றிலும் வேறு விதமாக இருந்தது.

அவனுக்கு எல்லாக் காரியங்களையும் நானே செய்ய வேண்டுமென்று என் கைகள் துடிக்கும். ஆனால் அவனோ என்னிடமிருந்து ஒன்றும் வேண்டுவதில்லை.

இந்த மனக் கொதிப்பினால்தானோ என்னவோ, என் உடல் நலம் குன்றிப் படுத்த படுக்கையாகி விட்டேன். என் வாழ்நாளில் இதற்கு முன் ஒருபோதும் நான் இப்படி அவஸ்தைப்பட்டது கிடையாது.

“டாக்டரை அனுப்புகிறேன்” என்று சொல்லிவிட்டு ஆபீஸுக்குப் போய் விட்டான் சீனு. டாக்டர் வந்து பார்க்கும் போதெல்லாம் எனக்குக் கடும் ஜுரம். “சீனு! சீனு!” என்று கத்தினேன். ஆனால் அவன் எங்கே இருக்கிறான்?

என்னை அறியாமல் “பகவானே, என்னைக் கவனிக்க இந்த உலகில் ஒருவருமில்லையா?” என்று கத்திவிட்டுக் களைப்பால் கண்ணை மூடினேன். அப்போது, “சீனு ஏன் இந்த நிலையில் ஆபீஸுக்குப் போகவேண்டும்? தாயின் பக்கத்தில் இருக்கக் கூடாதா? இதோ போய் அவனுக்கு டெலிபோன் செய்து வரவழைக்கிறேன்!” என்று டாக்டர் சொன்னது லேசாக என் காதில் விழுந்தது.

சற்று நேரத்திற்கெல்லாம் என் கன்னத்தில் ஏதோ உஷ்ணம் படவே கண்ணை விழித்தேன். நீர் துளித்த என் கண்களுக்கு மங்கலாகத் தெரிந்தது என்னை அணைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த சீனுவின் முகம். ஆம்; அவனது கண்ணீர்த் துளிதான் என் கன்னத்தில் சொட்டியதுபோலும்!

“சீனு!” என்றேன், பரவசமாக.

“அம்மா! கவலைப்படாதே! சீக்கிரம் சௌக்கியமடைந்துவிடுவாய். ஏன் உன்னைக் கவனிக்க யாரும் இல்லை என்றாய்? என்னைப் பெற்றெடுத்த உனக்கு என் அன்பில் நம்பிக்கை யில்லையா?” என்று பரிவுடன் கேட்டவனாய் என் கரத்தைப் பிடித்துக் கொண்டு விசப்பினான், குழந்தை.

“குழந்தை. அழாதே!” என்ற வண்ணம் அவனது தலைமயிரைக் கோதினேன். அதே சமயத்தில் பத்து வருஷங்களுக்கு முன்னால் அவன் தலையிலிருந்த கட்டுக் குடுமியை வாரிப் பின்னிய ஞாபகம் எனக்கு வந்தது.

அன்றிலிருந்தே என் உடல் நிலையில் தெளிவு காணப்பட்டது. சீக்கிரத்திலேயே பூர்ண சொஸ்தமடைந்து விட்டேன்.

இப்போதெல்லாம், "பாட்டி, பாட்டி!" என்று குழந்தைகள்கூட எப்போதும் என்னையே சுற்றி வளைத்துக் கொண்டு எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறார்கள்

வாழ்க்கையின் துயரங்களைத் தாளாமல் நான் கஷ்டப் பட்டதைக் கண்டு இப் பச்சிளங் குழந்தைகளுக்கும் என்மேல் அனுதாபம் வந்து விட்டது போலும்!

நான் நோயுற்றுப் படுத்திருந்தபோது என் அறைக்குள் அவர்கள் வரக்கூடாது என்றும், சத்தம் போட்டு எனக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது என்றும் கமலா குழந்தைகளைக் கண்டிப்பதுண்டு. அதிலிருந்து என் அறைக்குள் வர அந்தக் குழந்தைகளுக்குத் தானாகவே சிரத்தை தோன்றி விட்டது. "செய்யாதே!" என்பதைச் செய்ய விரும்புவதுதானே குழந்தை உள்ளம்?

அன்று நாற்புறமும் குழந்தைகள் சூழ உட்கார்ந்திருந்தேன். என் மனதில் தோன்றிய கதைகளைச் சொல்லி அவர்களை மகிழ்வித்துக் கொண்டிருந்தேன். அப்போது தான் சீனுவும் ஆபீஸிலிருந்து வந்துகொண்டிருந்தான்.

"அம்மா! சாரங்கன் உனக்குக் கடிதம் போட்டிருக்கிறான்!" என்றான் சீனு.

"என்னடா எழுதியிருக்கிறான்?" என்று பரபரப்புடன் கேட்டேன், நான்.

சீனு கடிதத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான் :

அம்மாவுக்கு,

அநேக நமஸ்காரம். நீ போனதிலிருந்து வீடே 'வெறிச்' சென்று இருக்கிறது. ராஜம் எப்போதும் உன்னை நினைந்து உருகுகிறாள் ; குழந்தைகளுக்கோ சதா உன் ஞாபகம்தான்!

காவேரியில் தண்ணீர் கரை புரண்டு ஓடுகிறது. அடுத்த வெள்ளிக்கிழமையிலிருந்து ஐப்பசி மாத ஆரம்பமல்லவா? அவசியம் துலா ஸ்நானத்துக்கு இவ்விடம் வந்து சேரவும்.

உன் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கும்,

சாரங்கன்.

இதைப் படிக்கும்போதே "இப் பாரத உலகில் எனக்கு இனிக் குறை என்பதேது?" என்ற இன்ப உணர்ச்சி என் உள்ளத்தில் தோன்றி, என்னைப் பெரும் இன்ப வெள்ளத்தில் மூழ்கடித்தது!




சிங்க ராஜாவின் அரண்மனையில் கட்டியிருந்த ஆலாட்சி மணி என்றுமில்லாதபடி ஒலித்தது. ஆலாட்சிமணியின் ஓசையைக் கேட்ட சிங்க ராஜா அரண்மனை வாசலுக்கு ஓடோடியும் வந்தார். அங்கே ஆடு, மாடு, அணில், காண்டா மிருகம், குரங்கு முதலிய மிருகங்கள் கும்பலாக நின்றுகொண்டிருந்தன. சிங்க ராஜாவைப் பார்த்தவுடன் குரங்கு பேச ஆரம்பித்தது. "மிருக குல அரசனே! வணங்குகிறேன். மனிதர்களின் செய்கை வர வர ரொம்ப மோசமாகப் போய்க் கொண்டிருக்கிறது. பட்டணங்களில் நம்முடைய பெயர்களில் தினம் ஒரு பத்திரிகை புதிசு புதிசாகப் பிறக்கின்றன. அதில் நம்மையும் நமது குலத்தையும் பற்றி ரொம்பவும் கேவலமாக எழுதி வருகிறார்கள். இதை அடக்க உடனே ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று சொல்லிவிட்டு ஆத்திரத்தோடு தன்னுடைய வாலைக் கையில் பிடித்துக் கொண்டு சுழற்றிக் கொண்டிருந்தது குரங்கு.

"ராஜாவே! நம்முடைய சகோதரர்களை யெல்லாம் தனித் தனியாய்ப் பிடித்துத் தனித்தனிக் கூண்டுக்குள் அடைத்து "மிருகக் காட்சிச் சாலை" என்று ஒன்றை மனிதர்கள் நடத்துகிறார்கள். அந்தக் காட்சிச் சாலையில் ஒரு வாண்டுப் பயலும் சிறு குட்டி ஒருத்தியும் பேசிக் கொண்டதைக் கேளுங்கள். 'டேய்! இந்தக் காண்டா மிருகத்தைப் பார்ப்பதற்குக் காசு கொடுத்து விட்டுக் காட்சிச் சாலைக்கு வந்தோமே, நம்முடைய மாமாவைப் பார்த்தால் போதாதா?" என்று என்னைத் தங்களுடைய மாமாவுடன் ஒப்பிட்டுப் பேசி என்னை அவமானப் படுத்தினார்கள்!" என்று சொல்லிக் கண்ணீர் விட்டது காண்டா மிருகம்.

"அதுமட்டுமா? 'என்னடா, எருமை மாடு மாதிரி நிற்கிறாயே! உனக்குப் புத்தி [யில்லை?' என்று தங்களுக்குள் திட்டி என்னைக் கேவலப்படுத்துகிறார்கள் இந்த மனிதர்கள்" என்று சொல்லிக் கத்தியது எருமை.

இப்படி எல்லா மிருகங்களும தங்கள் குறைகளைக் கூறிக் கொண்ட பிறகு சிங்க ராஜா ஒரு தீர்மானம் செய்தார். அதாவது குரங்கை ஆசிரியராகப் போட்டு, "மனிதன்" என்ற பெயரில் ஒரு பத்திரிகை ஆரம்பித்து, அதில் மனிதர்களைத் தாக்கியும் கேவலப்படுத்தியும் கதைகளும் கட்டுரைகளும் எழுதுவது என்பதுதான் அந்தத் தீர்மானம். எல்லா மிருகங்களும் சிங்கத்தின் யோசனையை வரவேற்றன.

ஒரு நாள் இரவு பன்னிரண்டு மணிக்கு "மனிதன்" என்ற பெயரில் முதல் இதழ் வெளியாயிற்று. அதை மிருகங்கள் எல்லாம் ஆவலோடு வாங்கிப் படித்துப் பார்த்தன. அதில் மனிதர்களைப் பழித்துப் பலவிதமான கேலிச் சித்திரங்களும் கட்டுரைகளும் வெளியாகியிருந்தன. அதைப் பார்த்தவுடன் மனிதர்களைப் பழி வாங்கி விட்டதாக நினைத்து மிருகங்கள் சந்

தோஷ ஆரவாரம் செய்தன.



காட்டில் உள்ள பலவகைப்பட்ட மிருகங்களும் ஒற்றுமையுடன் இருப்பதற்காக வேண்டிச் சிங்கராஜா ஒரு அருமையான கட்டுரை எழுதியிருந்தார். அதாவது "நமக்குள் ஒருவர் 'உறுமுவதும்' இன்னொருவர் 'ஊளை' யிடுவதும் வேறொருவர் 'குரைப்பதும் ஓலமிடு'வதும் போன்ற பல மொழிகளை வைத்துக் கொண்டிருக்கிறோம். அது கூடவே கூடாது. அவரவர்கள் அவரவர்களுடைய நண்பர்களிடம் வேண்டுமானால் தங்களுடைய மொழிகளில் பேசிக் கொள்ளலாம். ஆனால், நமது காட்டின் பொது மொழியாக இருக்க வேண்டியது 'கர்ஜனை' என்ற மொழிதான். அடுத்து வரும் நமது கூட்டத்தில் எல்லோரும் கர்ஜனை மூலம்தான் பேச வேண்டும்" என்று காரண காரியங்களுடன் எழுதியிருந்தது.

இதைப் படித்தவுடன் சில மிருகங்களுக்குச் சிங்க ராஜாவின் யோசனை பிடிக்கவில்லை. தங்களுடைய அபிப்பிராயத்தை வெளியிடத் தைரியம் இல்லாமல் குசுகுசு வென்று பேசிக் கொண்டிருந்தன. அந்தச் சமயத்தில் இதே அபிப்பிராயம் கொண்ட கழுதை ஒன்று அங்கு வந்து சேர்ந்தது. அந்தக் கழுதை பட்டணத்தி லிருந்து தன் எஜமானனுக்குத் தெரியாமல் ஓடி வந்த கழுதை. அது தனக்குள் ஒரு கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டு சிங்க ராஜாவுக்கு எதிராகக் காட்டில் ஒரு கூட்டம் போட்டது. அந்தக் கூட்டத்தில் கழுதை பேசியதாவது:- "தோழர்களே! சிங்கம் தன்னுடைய சொந்த மொழியாகிய 'கர்ஜனை'யை எல்லாரும் பேச வேண்டும் என்று சொல்லுவது ரொம்பவும் அசிங்கமான பேச்சு. அந்த அசிங்கத்துக்குப் புத்தி கற்பிக்க வேண்டும். நம்முடைய ஆதிமொழி 'ஓலமிடுவது'தான். காட்டின் பொது மொழியாக ஏதாவது வர வேண்டுமானால் ஓலமிடுவது ஒன்றே வர வேண்டும்" என்று ஓலமிட்டு விட்டுக் கூட்டத்தை முடித்தது.

அடுத்த நாள் வெளியான "மனிதன்" பத்திரிகையில் ஆசிரியர் குரங்கார் கழுதையின் மட்டரகமான பேச்சை வைத்துக் கொண்டு "கழுதை புராணம்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியிருந்தார். அதில் "இந்தக் கழுதை பட்டணத்திலிருந்து ஓடி வந்த திருட்டுக் கழுதை. இது பட்டணத்தில் மனிதர்களுக்கு அழுக்குத் துணி தூக்கி வயிறு வளர்த்து வந்தது. ஆகையினால் அந்த மனிதர்களின் புத்திதான் இதற்கும் வந்திருக்கிறது. இந்தக் கழுதையின் ஓலத்தில் ஒருவரும் ஏமாற வேண்டாம். நாம் எல்லாரும் இந்தக் காட்டு ராஜாக்கள் என்று 'கர்ஜனை' செய்வோம்" என்று எழுதியிருந்தது.

இதைப் படித்த கழுதைக்குப் பொல்லாத கோபம் வந்து விட்டது. நேரே "மனிதன்" பத்திரிகை ஆபீசுக்குப் போய்ப் பத்திரிகை அச்சடிப்பதற்காக வைத்திருந்த கடிதாசிகளை யெல்லாம் தின்றுவிட்டு வந்துவிட்டது. தன்னுடைய கட்சி ஜெயித்துவிட்டதாகவும் இனிமேல் காட்டில் ஓலமிடுவதுதான் பொது மொழி என்றும் அது நினைத்துத் திருப்தியடைந்தது.

கழுதையைத் தேடிக்கொண்டு பட்டணத்திலிருந்து வந்த எஜமானன் ஓலச் சத்தத்தைக் கேட்டுப் பெரிய தடியுடன் அங்கு வந்தான்! தன்னுடைய கழுதை ஓலமிட்டுக் கொண்டு இருப்பதைப் பார்த்து, "பொல்லாத கழுதையே! என் வீட்டுத் தீனியைத் தின்றுவிட்டு இங்கு வந்தா ஓலமிடுகிறாய்?" என்று சொல்லி அதன் முதுகில் நல்ல உதை கொடுத்து ஓட்டிக்கொண்டு போய்விட்டான்.

காகிதம் இல்லாததால் "மனிதன்" பத்திரிகை நின்றுவிட்டது. கழுதை போய்த் தொலைந்ததால் காட்டில் ஏற்பட்ட கலகமும் அடங்கி விட்டது.




ராக்கம்மாள் புதுப் பட்டணத்தை அடைந்தபோது மணி ஆறு அல்லது ஆறரைதான் இருக்கும்.

சூரியன் அடிவானத்திலிருந்து அப்போதுதான் கொஞ்சம் கொஞ்சமாக மேலே வந்து கொண்டிருந்தான்.

காட்டுப் பாதையை விட்டுவிட்டு ஊருக்குள் அடியெடுத்து வைத்ததும், அவளுடைய மனம் திடுக் திடுக்கென்று அடித்துக் கொண்டது. அவள் பீதியுடன் நாற்புறமும் பார்த்தாள். அவள் யாருக்காகவோ பயப்படுவது போலக் காணப்பட்டாள்.

நேர்ப் பாதையை விட்டுவிட்டுச் சந்து பொந்துகள் வழியே புகுந்து ஒரு கோடியில் பஸ் ஸ்டாண்டை அடைந்தாள்.

புதுப்பட்டணத்திலிருந்து சதுர்வேத மங்கலத்துக்குப் போகும் பஸ் கிடைப்பது எப்போதுமே கஷ்டம். கூட்டம் அசாத்தியமாக இருக்கும். ஒவ்வொரு சமயம் ஒரு நாள் முழுவதும் காத்துக் கொண்டே இருந்துவிட்டு பஸ் கிடைக்காமல் ஏமாற்றமடைவதுகூட உண்டு. ஆனால் ராக்கம்மாளின் அதிர்ஷ்டம், அன்று அவளுக்கு இலகுவாக பஸ் கிடைத்தது. கூட்டமும் இல்லை. அவள் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்து, மூட்டையைக் கீழே வைத்தாள்; மீண்டும் பீதியுடன் வெளியே பார்த்தாள்.

வண்டி புறப்பட்டதும் அவள் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். ஒரு பெரிய ஆபத்திலிருந்து விடுபட்டுவிட்டவள் போலக் காணப்பட்டாள்.

சதுர்வேத மங்கலம் அங்கிருந்து பத்து மைல் தூரம் இருக்கும். இன்னும் ஏறக்குறைய ஒரு மணி நேரத்துக்குள் அங்கே போய்விடலாம் என்பதை நினைக்கும்போது ராக்கம்மாளுக்குச் சற்று நிம்மதி உண்டாயிற்று.

தூக்கம் அவளுடைய கண்ணைச் சுழற்றியது. ஓட்டமும் நடையுமாக நடந்து வந்த களைப்பு அவளுடைய உடம்பு முழுவதும் பரவி, ஒரு வகையான வேதனையை உண்டாக்கிற்று.

இப்படி அவளுடைய உடம்பு முழுவதும் களைத்து வாடியபோதிலும், அவளுடைய உள்ளம் மாத்திரம் வாடவில்லை. அது டாப்ரா ஒரு ஜீவனுக்காக ஆண்டவனை நோக்கி இடைவிடாமல் தொழுது கொண்டிருந்தது.

“கடவுளே, அவளைக் காப்பாற்று; எப்படியாவது காப்பாற்று. என்னைக் கைவிட்டு விடாதே!” என்று அவள் இறைவனை வேண்டிக் கொண்டாள்.

கடவுள் தன்னைக் கைவிட மாட்டார். அவ்வளவு பெரிய தண்டனை தனக்குக் கொடுக்க மாட்டார். பாக்கியம் எப்படியாவது பிழைத்துக் கொள்வாள். மலையத்தனை அளவு பாவம் செய்திருந்தபோதிலும் கடுகத்தனை அளவு புண்ணியமாவது அவள் செய்திருக்க மாட்டாளா? அந்தப் புண்ணியம் இப்போது அவளைக் காப்பாற்றாதா?— இவ்விதமாக அவள் தன்னைத் தேற்றிக் கொண்டாள்.

★

பாக்கியம் யார்? அவளுக்கு என்ன நேர்ந்துவிட்டது? ராக்கம்மாள் இப்போது எங்கே போகிறாள் என்பதையெல்லாம் தெரிந்துகொள்ள வேண்டுமானால், அதற்கு முதல் நாள் ரங்கபுரத்தில் நடந்ததைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ராக்கம்மாள் வழக்கம்போலக் காட்டுக்குப் போய்விட்டு விளக்கு வைக்கும் நேரத்தில் வீட்டுக்கு வந்தாள். பக்கத்து வீட்டுச் சிறுமி ஒருத்தி ஓடி வந்து, “ஆயா, இந்தா உனக்கு ஒரு கடிதாசி வந்திருக்கு!” என்று சொல்லி அவள் கையில் கொடுத்துவிட்டுப் போனாள்.

கடிதாசியா? எங்கிருந்து?

அவளுக்குத் தெரியும், எங்கிருந்து அது வந்திருக்கும் என்று. உலகத்தில் ஒரே ஒரு இடத்திலிருந்துதான் அவளுக்குக் கடிதம் வருவது வழக்கம். இந்தக் கடிதமும் அங்கேயிருந்துதான் வந்திருக்கும்!

என்ன எழுதி யிருப்பான்? பொங்கலுக்கு வரச்சொல்லி எழுதி யிருக்கிருனோ? ஒரு கணம் அந்தக் கிழவியின் முகத்திலே குதூகலம் பொங்கித் ததும்பிற்று.

இந்தத் தடவை ஊரெல்லாம் பால் பொங்கும்; அவளுடைய உள்ளத்திலும் பால் பொங்கும்.

கடிதத்தை எடுத்துக் கொண்டு, பக்கத்துத் தெருவில் இருந்த நாட்டாண்மைக்காரர் வீட்டுக்குப் போய், அவரிடம் அதைக் கொடுத்துப் படிக்கச் சொன்னுள்.

நாட்டாண்மைக்காரர் கடிதத்தை உடைத்துப் படித்தார். அவருடைய முகம் சற்று விகாரமடைந்தது. கடிதத்தை மீண்டும் உறையில் திணித்து விட்டுச் சற்று நேரம் பேசாமல் இருந்தார்.

கிழவிக்கு அவசரம் தாங்கவில்லை.

"என்ன ஐயா? என்ன எழுதி யிருக்கா?" என்று பதட்டத்துடன் கேட்டாள்.

"உன் மகளுக்குப் பெரியம்மை கண்டிருக்கிறதாம். சாகப் பிழைக்கக் கிடக்கிருளாம். கஞ்சி காய்ச்சி ஊற்றுவதற்குக் கூட யாரும் இல்லையாம். உன்னை உடனே புறப்பட்டு வரச் சொல்லி எழுதியிருக்கு."

அவ்வளவுதான்; கிழவியின் தலையில் இடிவிழுந்தது போலிருந்தது. மூச்சு கூட அவளுக்கு நின்றுவிட்டது போலிருந்தது. ஒரு வார்த்தை கூட அவளுடைய வாயிலிருந்து வெளி வரவில்லை.

மௌனமாக வீட்டுக்குப் போனுள்; அப்படியே உட்கார்ந்து விட்டாள்.

பாழாய்ப்போன அந்தக் கடிதம் கொஞ்ச நேரத்துக்கு முன்பே கிடைத்திருக்கக் கூடாதா? இன்மேல் அவள் எப்படிப் போவது? இருட்டிவிட்டதே! அங்கிருந்து மூன்று மைல் காட்டுப் பாதை வழியாக நடந்து புதுப் பட்டணத்துக்குப் போய், பிறகு பத்து மைல் அங்கிருந்து பஸ்ஸில் போய், மறுபடியும் மூன்று மைல் நடக்க வேண்டும்.

அவள் காலையில்தான் போக முடியும். அதுவரை அவள் காத்திருக்க வேண்டும். எப்படிக் காத்திருப்பது?

அங்கே அவளுடைய அருமை மகள் சாகக் கிடக்கும்போது, அவள் இங்கே எப்படி அமைதியாக இருக்க முடியும்?

ராக்கம்மாளுடைய கண்களில் அழுவதற்குக் கூடக் கண்ணீர் இல்லை. ஐம்பத்தைந்து வருஷமாக அழுது அழுது, கண்ணீர் சிந்திச் சிந்தி, அவளுடைய கண்களில் உள்ள நீர் வறண்டு விட்டது. இனி அழுவதற்கு அங்கே நீர் இல்லை.

மூக்கை மாத்திரம் சிந்திச் சேலைத் தலைப்பில் துடைத்துக் கொண்டாள்.

அவள் வெகு நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். ஒவ்வொரு நிமிஷம் கழிவதும் ஒரு யுகம்போல இருந்தது.

இரவு நீண்டதாகத் தோன்றியது. விடியவே விடியாதோ என்றுகூட நினைக்கும்படியாகத் தோன்றியது.

எப்போது விடியும், எப்போது விடியும் என்று அவள் காத்துக் கொண்டே இருந்தாள். கடைசியில், விடியாத அந்த இரவும் ஒருவாறு விடிந்து கொண்டே வந்தது.

எங்கிருந்தோ ஒரு சேவல் கூவியது. கிழக்குத் திக்கிலே இலேசாக ஒரு வெளிச்சம் தோன்றியது. ராக்கம்மாளின் முகத்திலும் கொஞ்சம் பிரகாசம் தோன்றியது.

அவள் எழுந்தாள். சேலையைச் சரியாக உடுத்திக் கொண்டாள். ஒரு சிறு மூட்டையை மாத்திரம் தூக்கிக் கொண்டாள். புறப்பட்டாள்.

விடிந்து கொஞ்ச நேரத்துக்குள் புதுப் பட்டணத்தை அடைந்தாள்.

★

ஒன்று, இரண்டு, மூன்று என்று பல மைல் கற்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஓடி மறைந்தன.

பஸ் வெகு வேகமாகப் போய்க்கொண்டிருந்தது. ஆனால், ராக்கம்மாளின் மனம் அதையும் விட வெகு வேகமாகப் போய்க் கொண்டிருந்தது.

நடுவில் இரண்டொரு இடத்தில் மாத்திரம் பஸ் நின்றது.

அப்போதெல்லாம் அவளுடைய மனம் திடுக் திடுக்கென்று அடித்துக் கொள்ளும்.

ஆச்சு; வந்தாகிவிட்டது. அதோ, சதுர்வேதமங்கலம் காணப்படுகிறது. இன்னும் ஒரே ஒரு பர்லாங்கு தூரம்தான் இருக்கும். ஆனால், இதென்ன? — அவ்வளவு வேகமாகப் போய்க் கொண்டிருந்த பஸ் இப்பொழுது ஏன் இப்படித் திடீரென்று நிற்க வேண்டும்?



ராக்கம்மாளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவள் பீதியுடன்

வெளியே எட்டிப் பார்த்தான். ஆ, ஆபத்து, ஆபத்து! வந்து விட்டது ஆபத்து!

ஒரு போலீஸ் கான்ஸ்டபிள் உள்ளே வந்தான். சற்றுக் குனிந்து 'ஸீட்'டுக்கு அடியில் ஏதாவது இருக்கிறதா என்று கூர்ந்து நோக்கினான். அவன் தேடியது எதுவும் அங்கே காணோம். "ரைட்டோ!" என்று சொல்லிவிட்டு அவன் கீழே இறங்கப் போகும் சமயம், அங்கே ஒரு மூலையில் மறைத்து வைக்கப்பட்டிருந்த மூட்டையைத் தற்செயலாகப் பார்த்து விட்டான்.

"யார் மூட்டை அது?" என்று சற்று ஆங்காரத்துடன் கேட்டான் கான்ஸ்டபிள் கந்தப்பன்.

பதில் கிடைக்கவில்லை. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தார்கள். ராக்கம்மாள் நடுங்கினாள். அவளுக்கு மூச்சே நின்று விட்டது போலிருந்தது.

"என் மூட்டைதான், ஐயா!" என்று அவள் நடுங்கிக் கொண்டே அரையுங் குறையுமாகச் சொன்னாள்.

"மூட்டையில் என்ன இருக்கிறது?"

"அரிசி" என்றாள் ராக்கம்மாள்.

"சரி, இறங்கு!" என்றான் கந்தப்பன்.

நோயுற்றுக் கிடக்கும் தன் அருமை மகளுக்குக் கஞ்சி காய்ச்சிக் கொடுப்பதற்காக மூன்று படி அரிசியை ஒரு மூட்டை கட்டி அவள் எடுத்துக் கொண்டு வந்திருந்தாள். அது போலீஸ்காரர்கள் கண்ணில் பட்டுவிடக் கூடாதே என்று அவள் பயந்து கொண்டே வந்தாள். கடைசியில் அது அவள் அஞ்சியபடியே கண்டுபிடிக்கப்பட்டு விட்டது. ராக்கம்மாள் கெஞ்சினாள்; மன்றாடினாள்; கையெடுத்துக் கும்பிட்டாள், ஒன்றும் நடக்கவில்லை. மூட்டையைக் கையில் எடுத்துக் கொண்டு கீழே இறங்கினாள்.

"வா, ஸ்டேஷனுக்கு!" என்று சொல்லிக் கொண்டே ராக்கம்மாளை முன்னாலே விட்டு, கான்ஸ்டபிள் கந்தப்பன் பின்னால் நடந்தான்.

கடைசியில் என்ன? அரிசியைத் திருட்டுத்தனமாகக் கொண்டு போக முயன்ற குற்றத்துக்காக ராக்கம்மாளுக்கு ஐந்து நாள் சிறைத் தண்டனை கொடுக்கப்பட்டது.

அவள் தலையில் அடித்துக்கொண்டாள். மார்பிலும் வயிற்றிலும் அறைந்து கொண்டாள். "ஐயோ, என் மகளே!" என்று ஓலமிட்டாள்.

ஆனால், என்ன பிரயோஜனம்? சட்டம் என்றால் சட்டம்; பிளாக் மார்க்கட் என்றால் பிளாக் மார்க்கட்தான்!

★

நாட்கள் ஒன்று இரண்டு என்று ஐந்து ஓடி விட்டன.

மறுநாள் காலை பொழுது விடிந்ததும் ராக்கம்மாள் விடுதலையாவாள்!

அன்று இரவு முழுவதும் அவளுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. நடந்த சம்பவத்தை அவள் ஒரு முறை நினைத்துப் பார்த்தாள். தான் செய்தது குற்றமா என்பதையும் ஆராய்ந்து பார்த்தாள். ஆம், சந்தேகமே இல்லை. குற்றம்தான்! திருட்டுத்தனமாக அரிசியைக் கொண்டு வரக் கூடாது என்று சட்டம் இருக்கும்போது, அவள் எப்படி அரிசியைக் கொண்டு வரலாம்? ஆனால், அந்தச் சட்டம் அவளுக்கு மாத்திரந்தானா! இதை நினைக்கும்போது அவளுடைய மனம் பொருமியது.

ஒரு வாரத்துக்கு முன்பு, ஒருநாள் இரவு பன்னிரண்டு மணிக்குக் கோடி வீட்டுச் சுப்பையா முதலியார் புதுப்பட்டணத்திலிருந்து ஒரு வண்டி நிறைய அரிசியைக் கொண்டு வந்து மூட்டை மூட்டையாகத் தம்முடைய வீட்டில் இறக்கவில்லையா? ஜனங்கள் ஒரு பிடி அரிசிக்கு ஆலாகப் பறக்கும் இந்தக் காலத்தில், எங்கிருந்து கொண்டு

• • • • • • • • •

## அது என்ன ஜுரம்?

★

மகா வீரன் அலெக்ஸாந்தருடைய படைத் தலைவர்களில் ஒருவரான தெமிஸ் டாக்கிளிஸுக்கு, அவருடைய மகன் கடுமையான ஜுரத்தால் பிடிக்கப்பட்டிருப்பதாகக் கடிதம் வந்தது.

அவர் உடனே ஊருக்குப் புறப்பட்டுப் போனார். வீட்டுக்குப் போனதும், தம்முடைய மகனுடைய அறையிலிருந்து ஒரு அழகான பெண்மணி வெளியே போவதைக் கண்டார்.

தந்தையைப் பார்த்ததும் மகன், "அப்பா, எனக்கு வந்த ஜுரம் போய் விட்டது!" என்றான் குதூகலத்துடன்.

"அது எனக்குத் தெரியும். அந்த ஜுரத்தை நான் வழியில் பார்த்தேன்!" என்றார் தெமிஸ்டாக்கிளிஸ்

• • • • • • • • •

வந்தானே அந்தப் புண்ணியவான் வண்டி நிறைய மூட்டைகளை?

அது மாத்திரம் குற்றம் இல்லையா? மூன்று படி அரிசியைத் திருட்டுத்தனமாகக் கொண்டு வந்ததற்காக ஐந்து நாள் தண்டனை என்றால், மூட்டை மூட்டையாக அரிசியைத் திருட்டுத்தனமாக வைத்திருப்பவர்களுக்கு என்ன தண்டனை?

★

பொழுது விடிந்தது. ராக்கம்மாளுக்கு விடுதலை கிடைத்தது.

அவள் ஊரை நோக்கி நடந்தாள். இப்போது அவளுடைய மனதில் ஒரு குழப்பம் உண்டாயிற்று.

கடிதம் கிடைத்து ஐந்து நாட்களுக்குப் பிறகு இப்போது மகளைப் பார்க்க ஊருக்குப் போகிறாள். ஏன் இவ்வளவு தாமதம் என்று யாராவது கேட்டால், அவள் என்ன பதில் சொல்லுவது? "ஜெயிலுக்குப் போய்விட்டு வந்தேன்" என்று சொல்வதா? அது அவமானம் அல்லவா? அப்படியே உண்மையைச் சொன்னாலும் அதை நம்புவார்களா? அரிசியைத் திருட்டுத்தனமாகக் கொண்டு வந்ததற்காகச் சிறையில் அடைத்து விட்டார்கள் என்று சொன்னால் அந்தக் கிராமத்து ஜனங்களுக்கு நம்பிக்கை உண்டாகுமா? வேறு ஏதோ ஒரு திருட்டுத்தனம் செய்ததற்காகத்தான் தன்னைப் பிடித்து ஜெயிலில் போட்டிருக்க வேண்டும் என்று அவர்கள் நிச்சயம் நினைப்பார்கள். கடைசியில், உண்மையைச் சொல்லி விடுவது; யார் எப்படி வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும் என்ற முடிவுக்கு வந்தாள்.

ஊர்; அதோ வந்தாகி விட்டது. இன்னும் கொஞ்ச தூரந்தான் பாக்கியிருக்கிறது.

சற்றுத் தூரத்தில் யாரோ வருவது போலத் தோன்றியது. அவள் உற்று நோக்கினாள். அது அவளுடைய மருமகன் முத்துக் கருப்பன் அல்லவா? எங்கே புறப்பட்டுவிட்டான் அவன்? மகளுக்கு உடம்பு குணமாகி விட்டதோ?

இதற்குள் அவன் அருகில் வந்து விட்டான்.

"இப்போதுதான் எனக்கு விடுதலை கிடைத்தது" என்றாள் அவள்.

"அப்படியா? உன் மகளுக்கும் இப்போதுதான் விடுதலை கிடைத்தது! அதைச் சொல்வதற்காகத்தான் வந்தேன்!" என்றான் அவன்.

# காலக்ஷேபம்

டெலிபோன் ஆப்பரேட்டர் (போனில் பேசிக் கொண்டிருப்பவரைக் குறுக்கிட்டு) :—என்ன ஸார், இது? இருபது நிமிஷத்துக்கு மேல் ஆகிறது, நீங்கள் ரிஸீவரைக் கையில் எடுத்து! ஆனால் 'சரி, சரி' என்று சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே ஒழிய ஒரு வார்த்தை கூடப் பேசவில்லையே!

பேசுபவர் :—ஆமாம், ஸார்! நான் என் மனைவியுடன் பேசிக் கொண்டிருக்கிறேன்!

★

"டாக்டர் ஸார்! எனக்குத் தூக்கம் சரியாக வருவதில்லை. வெகுநேரம் சிரமப்பட்டுவிட்டுத் தூங்குகிறேன். இராத்திரி வேளையில் பூனை ஓடினால்கூட என் தூக்கம் கெட்டுவிடுகிறது!"

"அப்படியா? ஒரு பவுடர் தருகிறேன். சௌகரியமாய்ப் போய்விடும்."

"அதை நான் எப்பொழுது சாப்பிட வேண்டும்?"

"அந்த மருந்து உங்களுக்கு அல்ல. அந்தப் பூனைக்கு இரண்டு நாள் கொடுத்தீர்களானால் அப்புறம் அது உங்கள் வீட்டுப் பக்கம் தலை காட்டாது!"

★

அவர் :—டாக்டர் ஸார், நீங்கள் நம்ம வீட்டில் நடந்த விருந்துக்கு வராமலிருந்து விட்டீர்களே! விருந்து பிரமாதமாயிருந்தது. எனக்கு உங்கள் ஞாபகமாகவே இருந்தது.

டாக்டர் :—வாஸ்தவம்தான், ஸார்! எனக்குக்கூட அன்று முழுவதும் உங்கள் வீட்டு விருந்து ஞாபகமாகவே இருந்தது. உங்கள் வீட்டுக்கு வந்த விருந்தாளிகள் அத்தனை பேரும் சாப்பாட்டுக்குப் பிறகு சிகிச்சை செய்துகொள்ள என்னிடம்தானே வந்தார்கள்!

★

பெண் :—அம்மா, நீ நம்ம தலைமுறை தலைமுறையாக வந்த சொத்து என்று சொல்லுவாயே, அந்த ஜாடி......!

தாயார் (பரபரப்புடன்) :— ஆமாம், அதற்கு என்ன வந்தது இப்பொழுது?

பெண் :—ஒன்றுமில்லை, அந்த ஜாடியை இந்தத் தலைமுறை உடைத்து விட்டது!

கழக இலங்கைக் கடிதம்:

# பார்லிமெண்டில் மீண்டும் போர்

☆ ரஜனி ☆

— கொழும்பு, ஜனவரி 3

இலங்கையின் சரித்திரத்தில் முதன் முறையாகச் சென்னை சைவ சமாஜத்தின் 43-வது வருஷாந்திர மகாநாடு இவ்வருஷம் யாழ்ப்பாணத்தில் நடைபெற்றது. இந்த ஸ்தாபனத்தின் தோற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் ஸர் பொன்னம்பலம் ராமநாதன், அம்பலவாணர், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர், சுவாமி விபுலானந்தர் முதலான ஈழத்தின் தமிழ்ப் பெரியோர்கள் மூலகாரணமாயிருந்தும் சமாஜத்தின் மகாநாடு ஒன்றைக்கூடச் சென்ற நாற்பத்து இரண்டு ஆண்டுகளுக் கிடையில் இலங்கையிலே நடத்த முடியாமற் போயிற்று. இலங்கை சுதந்திரமடைந்த முதல் ஆண்டில் புராதன பௌத்த க்ஷேத்திரங்களை யெல்லாம் புனருத்தாரணம் செய்யச் சிங்களத் தலைவர்கள் பெரு முயற்சி செய்து வரும் இச் சமயத்திலாவது, சைவ சமாஜ மகாநாடு யாழ்ப்பாணத்திலே நடந்தது மிகவும் வரவேற்கப் படுகின்றது.

இலங்கைக்கும் இந்தியாவுக்கு மிடையில் தொன்று தொட்டு இருந்து வந்த சமய, கலாசார, சரித்திரத் தொடர்புகளை மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ பாலசுப்ரமணிய முதலியார் விரிவாக எடுத்துச் சொல்லி, இன்று இரு நாடுகளுக்கும் தகராறு ஏற்பட்டிருப்பதைக் குறித்து வருத்தம் தெரிவித்தார். இலங்கை - இந்தியா நல்லுறவு எந்தச் சக்தியினாலும் துண்டிக்க முடியாததென்றும், தற்சமயம் ஏற்பட்டுள்ள மனக்கசப்பு தமிழன்னையின் அருளால் நீங்கிவிடுமென்றும் அவர் நம்பிக்கை தெரிவித்தபொழுது மகாநாட்டில் பலத்த கரகோஷம் ஏற்பட்டது. ஸ்ரீமதி சிவகாமி அம்மையார் உள்படச் சுமார் நூறு பிரதிநிதிகள் இந்தியாவிலிருந்து மகாநாட்டுக்கு வந்திருந்தார்கள்.

## கட்டுப்பாடு வளர வழி

இலங்கையிலே நூற்றுக் கணக்கான பௌத்த ஆலயங்கள் இருக்கின்றன. கண்டி, அனுராதபுரம், பொலன்னறுவை, களனி ஆகிய இடங்களிலுள்ள கோவில்களில் பல கோடி ரூபாய்களுக்கு மேல் மதிப்பிடக் கூடிய நவரத்தின ஆபரணக் குவியல்களும் ஏராளமான சொத்துக்களுமிருக்கின்றன. அவைகளைப் பரிபாலிக்க பௌத்தமத ஆலய பரிபாலனச் சட்டம் என்று ஒரு சட்டம் இருப்பதால் பௌத்தக் கோவில்களில் பெருச்சாளிகள் நுழைய இடமில்லாமல் நிர்வாகம் சிறப்பாக நடக்கின்றது. ஹிந்து ஆலயப் பாதுகாப்புக்காகவும் அப்படிப்பட்ட ஒரு சட்டம் இயற்ற வேண்டுமென்று சைவ சமாஜ மகாநாடு ஒரு தீர்மானத்தை ஏகோபித்து நிறைவேற்றியிருக்கிறது. இச் சட்டம் இந்தக் கோவில்களின் நிர்வாகம் செம்மையாக நடைபெற உதவுவதோடு, சிங்களவர்களைப் போலவே தமிழர்களுக்கும் அவர்களது மதத்தில் ஊக்கம் ஏற்படுத்தி அதன் மூலம் தமிழ்ச் சமூகத்தின் கட்டுப்பாட்டை வளர்ப்பதாயிருக்கும்.

## மாஜி மந்திரியின் யோசனை

இலங்கை இந்தியர் பிரஜா உரிமை மசோதா ஜனவரி 21ம் தேதி யன்று பார்லிமெண்டில் மூன்றாவது தடவையாக நிறைவேற்றப்பட விருக்கிறது. மசோதாவில் நியாயமான பல திருத்தங்களுக்கு நோட்டீஸ் கொடுக்க எதிர்க் கட்சியினர் தயார் செய்துகொண் டிருக்கிறார்கள். மந்திரி பதவியை ராஜிநாமாச் செய்த ஸ்ரீ ஸி. சுந்தரலிங்கமும் பல திருத்தங்களைக் கொண்டு வரப் போகிறார். ஆனால் அரசாங்கக் கட்சியினர் தங்களுடைய மெஜாரிட்டி பலத்தினால் எல்லாத் திருத்தங்களையும் முறியடித்து மசோதாவை அப்படியே நிறைவேற்றி விடத் தீர்மானித்திருக்கிறார்கள்.

இந்தச் சமயத்தில் மாஜி மந்திரி ஸ்ரீ சுந்தரலிங்கம் இலங்கை - இந்தியப் பிரதம மந்திரிகளுக் கிடையிலுள்ள அபிப்பிராய வேற்றுமைகளை எடுத்துக் காட்டி யிருக்கிறார். நான்கே நான்கு விஷயங்களில் தான் அபிப்பிராயபேத மிருக்கிறதென்றும், அவைகளும் மிக அற்பமான விஷயங்களென்றும், பிரதமர் சேனநாயக ராஜதந்திரத்துடன் இப்பொழுது நடந்துகொண்டாலகூட இந்தியாவின் நட்பையும் நல்லெண்ணத்தையும் இழக்காமலிருக்க முடியுமென்றும் அவர் சொல்லி யிருக்கிறார்.




பரிசுத்தத்தில்
முதல் பாடம்

★

ஹமாம் சோப்புத் தேய்த்து
அனுதினமும் ஸ்நானம்
செய்யுங்கள்.



ஹமாம் சோப்பு

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி, லிமிடெட்.

# கம்பர் தரும் காட்சி

## 238. சிம்மாசனம் வேறு கேடா!

ராவணன் சிம்மாசனத்தில் இருந்து கொண்டு சபையோரைப் பார்த்துப் பேசுகிற சந்தர்ப்பம்.

* * *

ஜனங்கள் எல்லோருக்கும் ராவணனுடைய சக்தி இன்னதென்று தெரியும். அவனுடைய சேனை பலம் இன்னதென்பதும் தெரியும். யாரையும் அவன் பொருட்படுத்த வேண்டியதில்லை. அப்படியிருந்தும் என்றும் இல்லாத கிலேசத்துக்கு உள்ளாகி ஆலோசனையில் ஆழ்ந்திருக்கிறான் என்பதையும் கண்டு கொண்டார்கள்.

ஜனங்களுக்குப் பயம் உண்டாகி விட்டது. ஒரு வார்த்தை கூடப் பேசாமல் ஆங்காங்கு மௌனமாய் இருந்து விட்டார்கள்—அவ்வளவு பயம்!

திசைதொறும் நிறுவினன்
உலகு சேரினும்

பிசைதொழில் மறவரைப்;
பிற்தென் பேசுவ;—

விசையுறு பறவையும்
விலங்கும் வேற்றவும்

அசைதொழில் அஞ்சின—
சித்தி ரத்தினே!

[திசை தொறும் நிறுவினன்: தன்னுடைய ராஜ்யத்தில் எல்லா எல்லைப் புறங்களிலும் ஸ்திரமாக அமைத்து வைத்திருந்தான்;— என்னத்தை? உலகு சேரினும், பிசைதொழில் மறவரை: உலகத்தார் எல்லாரும் சேர்ந்து எதிர்த்த போதிலும் அவர்களை யெல்லாம் நிர்மூலமாக்கும் வீரர்களால் ஆகிய படைகளைத்; திசை தொறும் நிறுவினன்; பிற்து என் பேசுவ: அவன் சக்தி அந்த விதமாய் இருக்க வேறு என்ன சொல்ல வேண்டியதிருக்கிறது; விசையுறு பறவையும் விலங்கும் வேற்றவும்: வேகமாய்ப் பறக்கும் பக்ஷிகளும், ஆடு, மாடு, யானை முதலிய மிருகங்களும், தென்னை, கமுகு போன்ற மரங்களும்; அசை தொழில் அஞ்சின: அசையாமல் அப்படியே ஒடுங்கி நின்று விட்டன; சித்திரத்தினே: சித்திரங்கள் பயத்தினால் அசைவற்று ஒடுங்கி நிற்பதாகத் தோன்றின, அவைகளை ஒத்தே மேலே சொன்னவைகளும் அசைவற்று நின்றன.

குறிப்பு: ஆலோசனைக்காக ராவணன் செய்த ஏற்பாட்டைப் பார்த்து ஜனங்கள் திகில் அடைந்து விட்டார்கள். அந்தத் திகிலை (மக்களைத் தவிர்த்து விட்டு) பறவை விலங்குகளை வைத்துக் காட்டுவதால் அபூர்வமான பாவம் உண்டாய் விடுகிறது.]

* * *

இனி, சபா மண்டபத்துக்குள் வேலை ஆரம்பமாகிறது. ராவணன் பேசுகிறான். எவ்வளவோ மனம் கசந்தவனாய்ப் பேசுகிறான்:

"இதைவிடக் கேவலமான காரியம் எனக்கு இனி நேருவதற்கில்லை. இந்த நிலையில் எனக்குக் கௌரவம் (மாட்சி) என்றொன்று இருக்கவா செய்கிறது?"

"தாழ்ச்சிஇங்(கு) இதனின்மேல்த்
தருவ(து) என் இனி!

மாட்சிஓர் குரங்கினால்
அழிந்து மாண்டதால்,—

ஆட்சியும் அமைவும்என்
அரசும் நன்(று)எனாச்

சூழ்ச்சியின் கிழவரை
நோக்கிச் சொல்லினன்.

[தாழ்ச்சி இங்கு இதனின் மேல்த் தருவது என்: இதைவிட அவமானம் ஒன்றை எனக்குக்கொடுப்பதற்கு வேறு என்ன இருக்கிறது. என்னுடைய பெருமையும் புகழும் ஒரு குரங்கினால் அழிந்தது. போயே போய் விட்டது, திரும்பி வராது;—இந்த நிலையில்—ஆட்சியும்

அமைவும்: பிரஜைகளை ஆள்கிறது என்றும் அமைதி. நிர்வாகம் எல்லாம் ஒழுங்காய் நடக்கிறது என்றும்—அமைதியாய் இருக்கிற நிலைமை; என் அரசும்: ராஜ்யம் ராஜனும் வீற்றிருக்கும் பளிங்கும்; நன்றெனா: ரொம்ப அழகாய் இருக்கிறது என்று: சூழ்ச்சியின் கிழவரை நோக்கிச் சொல்லினன்: யோசனை செய்யக் கூடிய நிபுணர்களைப் பார்த்துச் சொன்னான்.

குறிப்பு: ராவணன் மனதில் உண்டான கசப்பு எவ்வளவு கஷ்டத்துடன் வெளி வருகிறது என்பதைச் செய்யுளின் உருவம் காட்டுகிறது.]

* * *

ராவணனது மனதில் அவமானத்தோடு சோகமும் வந்து தாக்குகிறது.

மனுஷன் என்று சொல்லக் கூடாத ஒருவன், குரங்கென்று நான் அவனைச் சொல்ல வேண்டும் அந்தக் குரங்கு ஏதோ ஒரு இடத்தில் தீயை வைத்தது. அந்த நெருப்பானது நாலா பக்கமும் பரவியது. நகரம் தொலைந்தது.

சுட்டது குரங்(கு),எரி
சூறை ஆடிடக்
கெட்டது கடிநகர்,
கிளையும் நண்பரும்
பட்டனர், பரிபவம்
பரந்த(து) எங்கணும்,—
இட்ட இவ் அரியணை
இருந்த(து) என்னுடல்!

[எரி சூறை ஆடிட: நெருப்பானது நகரம் முழுவதையும் வளைத்து எரிக்கவும்; கெட்டது கடி நகர்: நன்றாய்ப் பாதுகாக்கப்பட்ட இந்த இலங்கை நகரம் தகர்ந்து போய்விட்டது; பரிபவம் பரந்தது எங்கணும்: எங்கே பார்த்தாலும் துயரந்தான்; இட்ட இவ் அரியணை: அழகாக அமைத்து வைத்திருக்கிற இந்த சிம்மாசனத்தில்; இருந்தது என் உடல்: உயிரற்ற நிலையில் தான் இருக்கிறது என் உடல்.]

"நாடு நகரம் எல்லாம் அழிந்து போன பிறகு நான் ஒரு ராஜாவா! சிம்மாசனம் என்பதும் வேண்டுமா எனக்கு?" என்பது பாவம்.

---

# ஏழு புண்யாத்மாக்கள்!

வெகு நாட்களுக்கு முன்பு வடநாட்டுக் கோவில் ஒன்றில் கல்வி கேள்விகளில் சிறந்த அர்ச்சகர் ஒருவர் இருந்தார். அவருடன் பரமார்த்திக விஷயமாக அளவளாவிப் பேச உள்ளூர்ப் பிரமுகர்கள் ஏழு பேர் ஒவ்வொரு நாளும் வருவார்கள். அவர்கள் அவ்விதம் ஒரு நாள் பேசிக்கொண்டிருந்த போது, மேகம் திரண்டு வந்தது. எங்கும் காரிருள் பரந்தது. வானம் இடித்து முழக்கியது. மின்னல் 'பளிச், பளிச்' சென்று கிழக்கிலிருந்து மேற்குவரை வெட்டியது.

அப்பொழுது அந்த அர்ச்சகர் 'யார் ரொம்பவும் பாவம் செய்தவர்களோ, அவர் தலையில் தான் இடி விழும் என்று சான்றோர்கள் கூறுகின்றனர். நாம் இப்பொழுது எட்டுப் பேருமாகச் சேர்ந்து நிற்கிறோம். இந்த நிலையில் யார் ஒருவர் தலையில் இடி விழுந்தாலும் அத்தனை பேரும் பாதிக்கப்படுவோம். ஆகவே, ஒரு யுக்தி செய்வோம். அதோ பச்சை மரம் தெரிகிறது. வேப்பமரம். அதை ஒவ்வொருவராகத் தொட்டு விட்டு வருவோமானால், இடிக்குச் சௌகரியமாக இருக்கும். நம்மில் யார் ரொம்பவும் பாவம் செய்தவர்களோ, அவர் தலையில் விழுந்து விடும்'' என்றார்.

அதற்கு மற்ற எழுவரும் சம்மதித்தனர்.

ஒவ்வொருவராக வேப்பமரத்தைத்தொட்டு விட்டு வந்து விட்டனர். கடைசியாக, அர்ச்சகரும் ஒரு காசுக் கடைச் செட்டியாருந் தான் மரத்தைத் தொட பாக்கியிருந்தனர்.

செட்டியார் வட்டிக்குக் கடன் கொடுப்பவராயினும் ஊரில் அவருக்கு ஒரு நல்ல பெயர் உண்டு. அதற்குக் காரணம், குடிபடைகளுக்குக் கடன் கொடுத்திருந்தால், அதைக் கொடுமைப்படுத்தி வசூலிக்க மாட்டார். அவர்கள் கஷ்டத்துக்கு இரங்கி ''சரி, நிதானமாக வசதிப்பட்டபோது கொடு'' என்று சொல்லிவிட்டு வருவார்.

ஆகவே, அர்ச்சகர் ''செட்டியாரே! உங்களுக்கு நல்லவர், புண்யாத்மா என்ற பெயர் ஏற்கனவே உண்டு. ஆதலால் இடி உம்மை ஒன்றும் செய்யாது. நான்தான் மகா பாவம் செய்தவன் போலிருக்கிறது'' என்று கூறிவிட்டு வேப்பமரத்திடம் சென்றார்.

இடி ஒன்றும் செய்யவில்லை. அர்ச்சகர் பழுதில்லாமல் திரும்பிவிட்டார்.

இதைப் பார்த்த மற்றவர்கள் ''இந்தச் செட்டியார்தான் பாபாத்மாவாயிருக்கிறது. ஆஷாடபூதி!'' என்று திட்டினார்கள்.

செட்டியாரும் கண்ணில் கண்ணீருடன் ''ராமா, நான் மனமறிந்து ஒரு பாவமும் செய்ததில்லையே!'' என்று சொல்லிக் கொண்டே வேப்பமரத்தை அணுகினார்.

அப்பொழுது கண்ணைப் பறிக்கும் மின்னல் வெட்டியது. கட கட என்று இடி இடித்து விழுந்தது.

அந்த இடி மரத்தடியில் நின்ற வட்டிக் கடைச் செட்டியார் தலைமீது விழவில்லை. தூரத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்த ஏழு 'புண்யாத்மாக்கள்' மீது விழுந்தது!



# திரும்பி வருமா?

ரா. வீழிநாதன்

"அம்மா! இன்று லக்ஷ்மி பள்ளிக்கூடம் வரமாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறாள், அம்மா!" என்றாள் வேலைக்காரி, கையில் ஆறு வயதுச் சிறுமியைப் பிடித்துக்கொண்டே.

"ஏன் அம்மா, பள்ளிக்கூடம் போக மாட்டேன் என்கிறாய்? படிப்பு வரவேண்டாமா?" என்று அன்பாகத்தான் கேட்டாள் தாயார்.

இருந்தாலும் லக்ஷ்மியின் கண்களில் பொல பொலவென்று கண்ணீர் சுரந்தது. அவள் வாய்திறந்து பதில் சொல்லவேயில்லை. தலையைக் குனிந்தவாறு நின்றாள்.

அவளிடமிருந்து எவ்விதமான பதிலும் வராமற் போகவே, தாயார் "சரி, இன்றைக்குப் போனால் போகிறது. நாளைக்குக் கட்டாயம் போய்விட வேண்டும். என்ன?" என்றாள்.

"சரி அம்மா!" என்றாள் தலையைக் குனிந்துகொண்டே லக்ஷ்மி.

"சரி, போய் விளையாடு" என்று சொல்லிவிட்டுத் தாயார் தன் வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டாள்.

அன்று மத்தியானம் மூன்று மணியிருக்கும். சமையற்காரி சுந்தரி "அம்மா, லக்ஷ்மி படுத்தும் பாட்டைப் பார்த்தீர்களா?" என்று லக்ஷ்மியைப் பற்றிக் குறைகூறிக் கொண்டே வந்தாள்.

"என்ன செய்கிறாள்?"

"ஏதோ பட்சணம் பண்ணப் போகிறாளாம். 'சக்கரையைக் கொண்டுவா, ரவையைக் கொண்டுவா, நெய்யைக் கொண்டுவா' என்று நச்சரிக்கிறாள்."

"அப்படியா? அவளை இங்கே அழைத்துக் கொண்டுவா. நான் கேட்கிறேன்" என்றாள் தாயார். அவள் வந்ததும் "ஏன் லக்ஷ்மி! சுந்தரியை நீ ரொம்பப் படுத்துகிறாயாமே? வரவர நீ அசடாகிறாய்ப் போலிருக்கிறதே!" என்றாள்.

"இல்லையம்மா! நான் லட்டு உருண்டை பிடிக்கவேண்டும் என்று சாமான்கள் கேட்டேன். தர மாட்டேன் என்கிறாள். நீ கொடுக்கச் சொல்லு அம்மா!"

"உனக்கு அடுப்புப் பற்றவைக்கத் தெரியுமா? கடைசியில் பட்சணம் பண்ணுகிறேன் பேர்வழி என்று கையைக் காலைச் சுட்டுக்கொண்டு கத்தப் போகிறாய்!"

"அதெல்லாம் கத்த மாட்டேன். அம்மா! நான் ஜாக்கிரதையாகப் பண்ணுகிறேன்" என்றாள் லக்ஷ்மி.

"சுந்தரி! குழந்தைக்குப் பட்சணம் தின்ன ஆசையாக இருக்கிறாப் போலிருக்கிறது. நீ போய் அடுப்பைப் பற்ற வை. நானே வந்து பட்சணம் பண்ணிக் கொடுக்கிறேன்" என்றாள் தாயார்.

சமையற்காரி சுந்தரி சமையலறைப் பக்கம் போனாள். குழந்தை லக்ஷ்மி 'விடு விடு' என்று வேகமாக ஓடி அவளுடைய வழியை மறித்துக் கொண்டாள்.

"ஏன் லக்ஷ்மி, அவளைத் தடுக்கிறாய்? நான் வந்து பட்சணம் பண்ணித் தருகிறேன். இங்கே வா" என்று அழைத்தாள் அம்மா.

"எனக்கு இல்லையம்மா, பட்சணம். வந்து......"

"பின்னே யாருக்கு?"

"பறவைக் குஞ்சுகளுக்கு!"

"பறவைக் குஞ்சுகளுக்கா? அவை எங்கேயிருக்கின்றன?"

"நம் வீட்டுக் கொல்லைத் தாழ்வாரத்தில் ஒரு கிழிசல் குடை மாட்டியிருக்கிறது பார். அதற்குள்ளேயிருக்கின்றன, அம்மா!" என்றாள் லக்ஷ்மி.

எத்தனையோ வருஷ காலமாகக் கேட்பாரற்றுக் கவனிப்பாரற்று அந்தக் குடை கொல்லைத் தாழ்வாரத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. அந்தக் குடைக்குள் ஒரு பறவை கூடுகட்டிக் குஞ்சு பொரித்திருந்த விஷயம் அந்த வீட்டில் உள்ளவர் யாருக்குமே தெரியாது. லக்ஷ்மியின் குழந்தைக் கண்கள்தான் அதைக் கண்டு பிடித்தன.

"ஆமாம். அதில் எத்தனைக் குஞ்சுகள் இருக்கின்றன?"

"மூன்று குஞ்சுகள், அம்மா! அவை ரொம்ப ரொம்பச் சின்னவை அம்மா. பார்க்க எவ்வளவு அழகாயிருக்கின்றன, தெரியுமா?"

"சரி அதற்குப் பட்சணம் பண்ணிக் கொடுப்பானேன்? கொஞ்சம் சோறு மட்டும் போட்டால் போதாதோ?"



"அம்மா, இன்னும் அவற்றுக்குத் தானாகச் சாப்பிட வரவில்லை. தாய்ப் பறவை தான் எங்கிருந்தோ ஆகாரம் கொண்டு வந்து அவற்றின் வாயில் ஊட்டுகிறது. அம்மா வருவது அவற்றுக்கு எப்படித்தான் தெரிகிறதோ? 'கீ-கீ' என்று ஒரே சத்தம் போட ஆரம்பித்து விடுகிறதுகள்! ஏன் அம்மா, அப்படிச் சத்தம் போடுகிறதுகள்?"

"அதிருக்கட்டும்டி. நான் கேட்கிற கேள்விக்கு முதலில் பதில் சொல்லு. அதற்குத் தித்திப்புப் பட்சணம் எதற்கு? சாதம்போட்டால்போதாதா?"

"எப்படி அம்மா, போதும்? நாம் பட்சணம் தின்னவில்லையா? அப்படித்தானே அவையும். அன்றைக்கு ஒரு நாள் வாத்தியார் அம்மா, எங்களைப் பார்த்து, 'உங்களுக்குத் தித்திப்புப் பட்சணம் பிடிக்குமா, உப்புப் பட்சணம் பிடிக்குமா?' என்று கேட்டான். எல்லாருமே தித்திப்புப் பட்சணம்தான் பிடிக்கும் என்று சொன்னார்கள். அதிலிருந்து குழந்தைகளுக்கெல்லாம் தித்திப்புப் பட்சணந்தான் பிடிக்கும் என்று தெரிந்துகொண்டேன்......"

"பறவைக் குஞ்சுகளுக்காக யாராவது நெய்யையும் சர்க்கரையும் வீணாக அடிப்பார்களோ?"

"ஏன் அம்மா, அன்றைக்கு நீ தானே நெய் சேர்த்துக் கொண்டால் தான் உடம்பு நன்றாக வளரும் என்று சொல்லி, என்னை நாளும் நெய்யைக் கூடச் சாப்பிடச் சொன்னாய்? அதற்குள் மறந்து விட்டாயா, என்ன? பறவைக் குஞ்சுகளும் வளர வேண்டாமா?" என்று தாயாரையே மடக்கினாள் லக்ஷ்மி.

தாயார் அதற்கு மேல் பேசாமல், அவள் விருப்பப்படி சின்னச் சின்ன 'லட்டு' களாகச் செய்து கொடுத்தாள். குழந்தை லக்ஷ்மிக்கு ஒரே சந்தோஷம்!

அன்று முதல் பள்ளிக்கூடம் போய் வந்த மற்ற நேரங்களில் எல்லாம் அந்தப் பறவைக் குஞ்சுகளிடையே குடியிருக்கலானாள், லக்ஷ்மி. மற்ற குழந்தைகளுடன் விளையாடப் போவதையும் அவள் நிறுத்தி விட்டாள். தாயார் அவளுக்கென்று கொடுக்கும் தின்பண்டங்களில் எல்லாம் குஞ்சுப் பறவைகளுக்கும் வீதம் உண்டு.

சில தினங்களுக்கெல்லாம் பறவைக் குஞ்சுகளுக்கு இறக்கைகள் முளைத்து விட்டன. அந்தச் சந்தோஷச் செய்தியை அம்மாவிடம் சொல்லுவதற்காக ஓடினாள் லக்ஷ்மி.

அதைக் கேட்ட தாயார், "இறக்கை முளைத்துவிட்டதோ, இல்லையோ? இனி மேல் பறந்து போய்விடும். அப்புறம் நீ என்ன செய்வாய்?" என்றாள்.

"ஓடாது அம்மா! நீ சாதம் போட்டு என்னை வளர்க்கிறாய். நான் உன்னை விட்டு விட்டு ஓடுவேனா? அதே போலத்தானே அந்தக் குஞ்சுகளும். அம்மாவைப் போல ஆகாரம் அளிக்கும் என்னையும் அந்தக் குஞ்சுகள் விட்டு ஓடாது" என்றாள் லக்ஷ்மி. அவளுடைய குழந்தை உள்ளத்தில் தாய் அன்பு எப்படித் தான் வந்ததோ?

"சரி. ஓடாமலே இருக்கட்டும். எனக்கென்ன அதனால் இடைஞ்சல்?" என்று சொல்லித் தாயார் அந்தப் பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டாள்.

ஒரு நாள் இரவு ஒரு மணிக்கு நல்ல காற்றும் மழையும் அடிக்க ஆரம்பித்தது. பலத்த இடி வேறு இடிக்க ஆரம்பிக்கவே, தூக்கத்தில் இருந்த லக்ஷ்மி விழித்துக் கொண்டாள். உடனே அவளுக்குப் பறவைக் குஞ்சுகளின் நினைவுதான் வந்தது. தாயாரைக் கூப்பிட்டு, "அம்மா, அம்மா! மழை பெய்கிறாப் போலிருக்கிறதே! மழைச் சாரலில் பறவைக் குஞ்சுகள் நனைந்துவிடுமே!" என்று தன் கவலையைத் தெரிவித்தாள்.

"போடி, போ. பறவைக் குஞ்சுகள் கலைந்தால் நாம் என்ன செய்வதாம்? அதைத் தூக்கிக் கொண்டு வந்து கொசு வலை கட்டிக் கட்டிலில் படுக்க வைத்துக் கொள்ள முடியுமா, என்ன? பேசாமல் படுத்துத் தூங்கு" என்று ஒரு அதட்டல் போட்டாள் தாயார்.

லக்ஷ்மி தாயாரின் அதட்டலுக்குப் பயந்து கண்களை இறுக மூடிக் கொண்டாள். ஆனால் அவளுக்குத் தூக்கம் வந்தால் தானே? புரண்டு புரண்டு படுத்தாள்.

விடியற் காலை நான்கு மணி யிருக்கும். குழந்தை லக்ஷ்மியின் கண்கள் தன்னை யறியாமல் மூடின. அடுத்த கணமே அவள் கனவில் ஒரு பயங்கரக் காட்சி எழுந்தது. பறவைக் குஞ்சுகள் குளிர் தாங்காமல் குடைக்குள்ளிருந்து வெளியே வந்து ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தன. அவ்வழியே வந்த ஒரு பூனை அக் குஞ்சுகளைப் பார்த்ததும், பதுங்கிப் பதுங்கி அவற்றைப் பிடிப்பதற்காக வந்துகொண்டிருந்தது. 'அடே, அது ரொம்பக் கிட்ட வந்து விட்டதே! ஐயோ!' என்று கூச்சலிட்டுக் கொண்டே கனவு கலைந்து எழுந்து உட்கார்ந்தாள் லக்ஷ்மி.

அந்தக் கூச்சலைக்கேட்ட தாயார் பரபரப்புடன், "என்ன அம்மா?" என்று கேட்டாள். குழந்தை லக்ஷ்மியின் உடல் 'வெட வெட' வென்று நடுங்கிக் கொண்டிருந்தது. "அம்மா ஒரு பூனை......பறவைக் குஞ்சுகளை......" என்று சொல்லிக் கொண்டே எழுந்து கொல்லைப்புறம் ஓடினாள் லக்ஷ்மி. தாயாரும் அவளைப் பின் தொடர்ந்து போனாள்.

குடையும் குஞ்சுகளும் மிகப் பத்திரமாக இருந்தன. அதைக் கண்ட பின்தான் லக்ஷ்மிக்கு ஆறுதல் ஏற்பட்டது.

சில தினங்களுக்கெல்லாம், பறவைக் குஞ்சுகள் பறக்கும் சக்தியைப் பெற்று விட்டன. அதைக் கண்ட லக்ஷ்மிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. தன் குழந்தையின் வளர்ச்சியிலும், விளையாட்டிலும் மழலைச் சொல்லிலும் தாயாருக்கு கட்டற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறதல்லவா? அதே மகிழ்ச்சிதான் அவளுடைய குழந்தை உள்ளத்திலும் எழுந்தது.

அந்த நன்றி கெட்ட பறவைக் குஞ்சுகள் ஒரு நாள் அவளிடம் சொல்லிக் கொள்ளாமல் பறந்து போய் விட்டன. சுயேச்சையாக வாழும் தன்மை வாய்ந்த அவற்றுக்கு அடை பட்டுக் கிடப்பதற்குப் பைத்தியமா, என்ன?

அவை பறந்து சென்றதனால் லக்ஷ்மிக்கு ஏற்பட்ட வருத்தத்துக்கு ஓர் எல்லையில்லை.

"அம்மா, குஞ்சுகள் திரும்பி வந்து விடுமா? திரும்பி வந்து விடுமா?" என்று நாழிக்கொரு தடவை தாயாரைப் பார்த்துக் கேட்டாள்.

தாயார் என்ன பதில் சொல்லுவாள்? 'திரும்பி வராது' என்று சொல்லி அவளுடைய மனதைப் புண்படுத்த விரும்பவில்லை. ஆகவே 'வரும், கட்டாயம் வரும், அம்மா!' என்று சொல்லி வைத்தாள்.

ஒரு நாள் ஆயிற்று. இரண்டு நாள் ஆயிற்று. மூன்று நாளும் ஆயிற்று. போன பறவைகள் திரும்பவில்லை. குழந்தை லக்ஷ்மி பறவைகளின் சிந்தனையிலேயே மூழ்கி அன்ன ஆகாரமின்றிப் பொழுதைப் போக்கினாள். குழந்தையின் உடம்பு ஒன்றுக்குப் பாதியாக விட்டது. அடிக்கடி குடையைப் போய்ப் பார்த்து வருவாள். குழந்தை லக்ஷ்மிக்கு அந்த ஏக்கத்திலும் போன பறவைக் குஞ்சுகள் கட்டாயம் திரும்பி வந்துவிடும் என்ற நம்பிக்கை மட்டும் குறையவேயில்லை.

## அது மெய்தானா?

சீன தேசத்திலிருந்து ஒரு ராஜ குமாரன் அமெரிக்காவுக்குப் போயிருந்தானாம். அப்போது ஒரு பிரபுவின் மனைவி சீன தேசத்து விருந்தாளியுடன் பேசிக்கொண்டிருக்கையிலே "உங்களுடைய சீன தேசத்தில் கலியாணமாகும் வரை மணப்பெண் தனது புருஷன் முகத்தைப் பார்ப்பது வழக்கமில்லையாமே! மெய் தானா?" என்று கேட்டாள். அதற்கு ராஜ குமாரன:—"உங்கள் தேசத்தில் சில பெண்கள் கலியாணமான பிறகு தனது புருஷன் முகத்தைப் பார்ப்பதில்லையென்று கேள்விப்படுகிறேன். அது மெய்தானா?" என்றான். —பாரதியார்.

# வட்ட மேஜை

## ★ சென்னை நிலையம்

'செந்தமிழ் நாடென்னும் போதினிலே-இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே'

—என்ற வசனத்தின் உண்மையை அறிந்தவர்கள் வடநாட்டில் வாழும் தமிழர்களாகிய நாங்கள் தான். எங்களுள் எவ்வித வித்தியாசமும் இடையாது. தமிழ் எங்கள் காதில் ஒலிக்காதா என்று ஏங்கித் தவிக்கிறோம்.

தமிழ் நாட்டிலேயே வசிக்கும் உங்களுக்குத் தமிழ் எப்போதும் காதில் ஒலிக்கிறது. நினைத்தால் நல்ல தமிழ் சினிமாவிற்கோ அல்லது ஒரு தமிழ் இசைக் கச்சேரிக்கோ போகலாம். ஆனால் எங்களுக்கு அந்த பாக்யம் உண்டா? பம்பாய், டில்லியில் கர்நாடக சங்கீத சபாக்கள் உண்டு. ஆனால் எளிய குடும்பத்தினர் அடிக்கடி போக முடியாது. ரேடியோ ஒன்றுதான் எங்களைத் தமிழ்நாட்டுடன் உறவு கொண்டாடவைக்கும் சாதனம். நம் தமிழ் நாட்டு ரேடியோ நிலையங்கள் எங்கள் தாகத்தைச் சாந்தி செய்யக்கூடாதா?

நாங்கள் உத்தியோகத்தில் இருப்பவர்கள். ரேடியோ கேட்கும் நேரம் மாலை 7 முதல் இரவு 11 வரை. சனி, ஞாயிறு தான் பகலிலும் கேட்க எங்களுக்கு அவகாசம் உண்டு. எங்களுக்கு மத்திம அலை நிலையங்கள் அதாவது மதராஸ் 1 அல்லது திருச்சி நிலையங்களால் பிரயோஜனம் கிடையாது. சென்னை சிற்றலை தான் கேட்கலாம். அதில் மாலை, இரவுகளில் ஒலி பரப்பப்படுவது தெலுங்கு நிகழ்ச்சிகள். அல்லது தெலுங்குக் கீர்த்தனை, தெலுங்குப் பேச்சு, தெலுங்கு நாடகம், தெலுங்கு சினிமா ரிகார்டுகள், அல்லது ஹிந்துஸ்தானி டாக்கிப் பாட்டுக்கள்! தப்பித்தவறி தமிழ் ரிகார்டுகளை வைத்தால், 'யுகமோ ஒரு வாழ்நாள் எல்லாம்' என்ற சினிமாப் பாட்டு! எங்கள் தமிழ் அபிமானத்திற்கு நல்ல தண்டனை!

எப்படி B. B. C. நிலையங்கள் மறைமுகமாக ஏகாதிபத்திய ராஜ்யங்களுக்கு உதவி செய்து வருகின்றனவோ அது போல் சென்னை ரேடியோ நிலையம் ஆந்திரர்கள் சென்னையை உரிமை கொண்டாட உதவி செய்து வருகிறது. எனது வடநாட்டு நண்பர்கள் ரேடியோவை வைக்கும்போது மதராஸ் நடுவே வரும். ஆவலுடன் நிறுத்துவர். ஒரு தெலுங்குப் பேச்சைக் கேட்டுவிட்டு 'துமாரா மதராஸி பாஷா—கடு குண்டு பாஷாஹை' என்று தமிழனைக் கேலி செய்திருக்கிறார்கள். சில வடநாட்டு நண்பர்கள் 'சென்னை தமிழ்நாட்டைச் சேர்ந்தது என்கிறீர்களே, சென்னை ரேடியோவில் ஆந்திர பாஷைதானே வருகிறது!' என்று கேட்டிருக்கிறார்கள்.

விஜயவாடா நிலையம் ஆரம்பித்ததும் சென்னை சிற்றலைக்கு விமோசனம் ஏற்படும் என்று ஆவலுடன் எதிர்பார்த்தோம். நாங்கள் ஆந்திரரை விரட்ட வேண்டவில்லை; சென்னைச் சிற்றலையில் தமிழ் நிகழ்ச்சிகளுக்கும் முக்யத்துவம் வேண்டுகிறோம்.

முக்கியமாக சென்னை நிலையத்தார் கீழ்க்கண்ட சீர்திருத்தங்கள் செய்தல் வேண்டும்.

(1) Regional transmitter-கள் அதாவது மத்திம அலை நிலையங்களுக்கு அருகில் வாழும் அன்பர்களுக்கு நன்றாகக் கேட்கும். அதில் செய்திகள் — முக்கியமாக நடைபெற வேண்டும்.

(2) சென்னை சிற்றலை நிலையம் தூர நாட்டில் வாழும் தென்னிந்தியர் ஆவலைப் பூர்த்தி செய்ய வேண்டும். மதராஸ் 2-ல் தற்சமயம் மாலை நடக்கும் தெலுங்குப் பேச்சு, கிராம நிகழ்ச்சிகளை விஜயவாடா ஏற்றுக்கொண்டு மதராஸ் 2-ஐ விடுதலை செய்ய வேண்டும்.

(3) மாலை 6 மணி முதல் 11 மணி வரை நடக்கும் நிகழ்ச்சிகள் தான் நூற்றுக்கணக்கான மைல் தூரங்களில் உள்ளவர் கேட்க முடியும். ஆதலால் இந்த வேளையின் நிகழ்ச்சிகள் ரஸிக்கக் கூடியவையாக அமைதல் வேண்டும்.

(4) பிரபல பாடகர்களை யாவரும் நேரில் பாடிக் கேட்டிருக்க முடியாது. ஆதலால் அவர்கள் ரேடியோவில் அடிக்கடி பாடுதல் வேண்டும். சாதாரண சங்கீத வாத்தியார்களுக்கும் கல்யாணப் பெண்களுக்கும், ரேடியோ, விளம்பரக் கருவியாக இருத்தல் மறைய வேண்டும்.

(5) நல்ல நாடகங்கள், பிரபல ஆசிரியர்களின் பேச்சுகள்— (டி. கே. சி.; பி. ஸ்ரீ முதலிய அறிஞர்கள் பேசினால் எங்களுக்குக் கேட்க அலுக்கவே அலுக்காது) சென்னை நிலையம் தினம் நடத்தினால் அதற்கு நல்ல பிரக்யாதி ஏற்படும்.

(6) ஹிந்துஸ்தானி ரிகார்டுகள் வடநாட்டு ஸ்டேஷன்களில் எப்பொழுதும் கேட்கலாம். அதற்காகத் தமிழ் நாட்டு ரஸிகர்களின் நேரத்தைத் தமிழ் ரேடியோ நிலையங்கள் வீணாக்க வேண்டாம்.

எவ்வாறு சினிமாவிற்கு ஒரு தணிக்கை போர்டு இருக்கிறதோ அது போல் ரேடியோ நிலையங்களின் நிர்வாகத்திற்கும் ஒரு தணிக்கை போர்டு இருந்தால் நன்றாயிருக்கும். பிரபல ஆசிரியர்கள், சங்கீத வித்வான்கள் முதலியவர் கௌரவ மெம்பர்களாக அத்தகைய கமிட்டியிலோ, போர்டிலோ, சேர்ந்து பொதுஜனப் பணத்தை வீணாக விரயம் பண்ணாமல் காப்பாற்றலாம்.

பம்பாய்
1-1-49

ஜே. கணேசன்

○●○

## சங்கீதமும் கடைசி வகுப்பும்

ஜனவரி மாதம் 2உ 'கல்கி'யில் வெளிவந்த 'சங்கீத சர்வ கலாசாலை' என்ற கட்டுரையைப் படித்து மிகவும் மகிழ்ந்தேன். பெரும்பான்மையான மக்களின் உள்ளங்களில் குமுறிக் கொண்டிருக்கும் எண்ணங்களை அதில் எடுத்து உரைத்திருக்கிறது.

தற்போது சங்கீத சபைகள் நடக்கிற முறையில், மாதம் 500 ரூபாய்க்குக் குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கும் சங்கீதத்திற்கும் ஒருவிதத் தொடர்பும் இருப்பதற்கு இடமில்லாமல் இருக்கிறது. வெளியில் வந்து

நிற்கும் ஜனங்கள் கேட்கும்படி ஒலி பெருக்கிகள் அமைக்க வேண்டும் என்று எழுதினீர்கள். பணம் கொடுத்து உள்ளே போகும் கடைசி வகுப்புக்காரர்களுக்குத் தான் இச்சபைகள் செய்யும் மரியாதை என்ன? நடத்தும் கச்சேரிகளின் கடைசி வகுப்பிற்குக் கட்டணம், சாதாரணமாகப் பாட்டுக் கச்சேரியாயிருந்தால் ஒன்றரை ரூபாய். ஆட்டக் கச்சேரியாயிருந்தால் இரண்டரை ரூபாய் வாங்குகிறார்கள். கடைசி வகுப்பிற்கு இடம் 'பால்கனி'யின் இரண்டு ஓரங்கள். அதாவது கச்சேரி மேடையை நேராகப் பார்க்க முடியாமல் கழுத்தை வளைத்துப் பார்க்கக் கூடிய இடங்கள். ஆனால் மேடையாவது பூரணமாகத் தெரிய வேண்டும் அல்லவா? அதுவும் இல்லை. அந்தப் 'பால்கனி' ஓரங்களில் ஒன்றன்பின் ஒன்றாக மூன்று வரிசைகள் உண்டு. முதல் வரிசையில் உள்ளவர்கள் தான் கழுத்தை வளைத்து மேடையைப் பார்க்க முடியும். மற்றவர்களுக்கு அரை மேடை, கால் மேடை அல்லது அரைக்கால் மேடை தான் தெரியும். மூன்று மணி நேரம், பின் இரண்டு வரிசைகளில் உள்ளவர்கள் நின்று கொண்டே கச்சேரிகளை ரசிக்க வேண்டியிருக்கிறது. சோபாக்களில் உட்கார்ந்திருக்கும் செல்வர்கள் இப்பரிதாபக் காட்சியை அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கண் குளிர்வதுண்டு! ஏதோ சொற்ப வருமானக்காரர்கள் தாங்கள் சேமித்த தொகையிலிருந்து இரண்டரை ரூபாய் அளித்துக் கொடுத்து விட்டு ஒரு மணி நேரத்துக்கு முன்னால் வந்தும் மூன்று மணி நேரம் பெஞ்சியின் மேல் நின்று கொண்டு சபையை அனுபவிக்க வேண்டியிருந்தால் எரிச்சலாயிராதா?

சென்னை
2—1—49 கொ. நீ. சிங்காரவேலு

○●○

## ★ நிலைய மாற்றம்

நமது இந்திய சர்க்கார் இன்னும் சில மாதங்களுக்குள் கள்ளிக்கோட்டையில் ஒரு அகில இந்திய ரேடியோ நிலையம் ஸ்தாபிக்கப் போகிறார்கள். அத்துடன் இன்னும் ஒரு மாறுதலை இந்திய சர்க்கார் செய்வதற்கு நம் மாகாண சர்க்கார் சிபாரிசு செய்தால் நன்றாயிருக்கும். திருச்சி நிலையத்தை மதுரைக்கு மாற்ற வேண்டுமென்பதே அந்த மாறுதல். அவ்விதம் மாற்ற வேண்டும் என்று நான் கூறுவதற்கு முதல் காரணம், நமது மாகாணத்திலேயே சென்னைக்கு அடுத்தபடி ஜன நெருக்கமும் வியாபாரப் பெருக்கமும் உள்ள நகரம் மதுரை என்பதுதான். பண்டைகாலப் புகழும் சரித்திரப் புகழும் வாய்ந்தது மதுரை நகரமே.




இரண்டாவது காரணம் தான் மிக முக்கியமானது. அது பூகோள சாஸ்திரத்தையும் விஞ்ஞான சாஸ்திரத்தையும் அடிப்படையாகக் கொண்டது. தற்போதுள்ள திட்டத்தின்படி இன்னும் ஒரு சில மாதங்களில் சென்னைக்குத் தெற்கிலுள்ள நிலப்பரப்பில் சென்னை, கள்ளிக்கோட்டை, திருச்சி ஆகிய மூன்று இடங்களிலும் அகில இந்திய ரேடியோ நிலையங்கள் வேலை செய்யும். சாதாரணமாக நமது இந்தியாவிலுள்ள மத்திம அலைகளில (Medium wave) ஒலிபரப்பும் நிலையங்களின் கேட்கும் தூரம் நூறு அல்லது நூற்றிருபத்தைந்து மைல்கள் தான் இருக்கும். இதனால் நூற்றிருபத்தைந்து மைல்களுக்கு அப்பாலுள்ள இடங்களில் கேட்காது என்று அர்த்தமில்லை. நிலைய நிகழ்ச்சிகளின் சத்தத்தைக் காட்டிலும் இடி முழக்கம், 'கிரீச்' 'புர்' ஆகிய சத்தங்கள் தான் பிரதான ஸ்தானம் வகிக்கும். ஆகையால் நிலைய நிகழ்ச்சிகளைச் சரிவரக் கேட்க முடியாது. மேற்சொன்ன கேட்கும் தூரக் கணக்கின்படி சென்னைக்குத் தெற்கிலுள்ள நிலப்பரப்பில், திருநெல்வேலி ஜில்லா தவிர மற்ற எல்லா ஜில்லாக்களும் ஏதாவதொரு நிலையத்திலிருந்து கேட்கும் தூரத்திற்குள் இருக்கின்றன. இந்த மூன்று நிலையங்களுக்கு இடையிலுள்ள கோயமுத்தூர், சேலம், தென் ஆற்காடு, வட ஆற்காடு முதலிய ஜில்லாக்கள் ஒன்றுக்கு மேற்பட்ட நிலையங்களிலிருந்து கேட்கும் தூரத்திற்குள் இருக்கின்றன. ஆனால் திருநெல்வேலி ஜில்லா மட்டும் எந்த நிலையத்திலிருந்தும் கேட்கும் தூரத்திற்குள் இல்லை. ஆகவே இந்த மூன்று நிலையங்களும் சமவிகிதமாகவும் தூரத்தில் இல்லை. திருநெல்வேலி ஜில்லா விஷயத்திலுள்ள இக்குறைபாட்டைத் திருச்சி நிலையத்தை மதுரைக்கு மாற்றுவதன் மூலம் இலகுவில் தவிர்க்கலாம். இவ்விதம் மாற்றுதலால் மற்ற ஜில்லாக்கள் பாதிக்கப்படவில்லை என்பது படத்திலிருந்து தெரியும்.

சாதாரணமாக நம் இந்தியாவில் மலிவு விலை ரேடியோக்களே அதிகம். அவைகள் மத்திம அலை நிகழ்ச்சிகளை மட்டுமே நன்றாகப் பிடிக்கக் கூடியவை. ஆகவே மத்திம அலை நிலையங்களையே நம்பியிருக்கும் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ளவர்களுக்கு இம்மாறுதல் மிகுந்த உதவியளிக்கும்.

'ரேடியோ நிலையங்களை ஸ்தாபிக்கும் பொழுது இந்த விஷயங்களை யெல்லாம் கவனிக்காமலா திருச்சியில் நிலையத்தை ஸ்தாபித்தார்கள்?' என்று சிலர் கேட்கலாம். அவர்கள் கவனித்துத்தான் ஸ்தாபித்தார்கள். திருச்சியில் நிலையத்தை ஸ்தாபிக்கும்போது, தென்னிந்தியாவிலேயே சென்னையில் மட்டும் தான் ரேடியோ நிலையம் தொழிற் பட்டுக் கொண்டிருந்தது. ஆகவே சென்னைக்குத் தெற்கிலுள்ள நிலப்பரப்பின் நடுவிலுள்ள திருச்சியில் ஸ்தாபித்தார்கள். ஆனால் சென்னை, கள்ளிக்கோட்டை ஆகிய இரண்டு ரேடியோ நிலையங்கள் தொழிற்படும்போது மற்றொன்று திருச்சியி லிருப்பது சமவிகிதமாகாது. ஆகவே, திருச்சி நிலையத்தை மதுரைக்கு மாற்றினால் மூன்று நிலையங்களும் சமவிகிதமாகத் தொழிற்பட்டு நம் நாட்டு முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவி புரியும் என நம்புகிறேன்.

மதுரை
29—12—48 ரா. கணேசன்.

○●○

## ரேடியோ நிலையத்தில்

நம் திருச்சி நிலையத்தின் அறிவிப்பாளர்களுக்குக் கொஞ்சம் சங்கீத ஞானம் இருத்தல் அவசியம். உதாரணமாக, 4ம் தேதி இரவு மன்னார்குடி சாவித்திரி அம்மாள் அவர்களின் கொட்டு வாத்திய நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது. "ஏதாவுனரா" என்ற கல்யாணி

ராகக் கீர்த்தனத்தின் அனுபல்லவி முடிவில் ஓர் 'ஓவாங்க சீப் அனவுன்ஸ்' '' அடுத்த படியாக பைரவி ராகத்தில் 'யாரோ இவர் யாரோ?' என்ற ராமநாடகக் கீர்த்தனை'' என்று அறிவித்தார் அதைத் தொடர்ந்து கல்யாணி ராகக் கீர்த்தனையின் சரணம் ஆரம்பிக்கப் பட்டது.

இரண்டாவது இசைத்தட்டு நிகழ்ச்சிகளில் நல்ல ரசிக்கக் கூடிய இசைத் தட்டுக்களும் சலிப்புத் தட்ட வைக்கின்றன. இயந்திரக் கோளாறோ அல்லது பழைய ஊசிகளை உபயோகிப்பதாலோ தெரியவில்லை!

விஜயவாடா நிலையத்தில் பி. பி. ஸி செய்திகளை இரவு 9-30 மணிக்கு அஞ்சல் செய்யாமலிருப்பது மிகவும் போற்றத் தக்கது. தமிழ் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்காகவும் பறை சாற்றும் திருச்சி நிலையம்மட்டும் ஏன் பி. பி. ஸி. செய்தியை அஞ்சல் செய்ய வேண்டும்?

கிராம நிகழ்ச்சிகள் எல்லோரையும் (முக்கியமாக கிராமவாசிகளையாவது) கவர்ச்சிப்பதில்லை. மாதர் நிகழ்ச்சிகளோ அதைவிட மோசம்.

நடைபெற்ற இசை விழாக்களின் மின்சார ஒலிப் பதிவுகள் மிகுந்த ஏமாற்ற மளித்தன. உதாரணமாக தியாகராஜ பாகவதரின் ''கேதாரம்'' ''மணிரங்கு'' கீர்த்தனங்கள் அக்கச்சேரிக்கு முன் தினம் திருச்சி நிலையத்தில் அதே இசையாளரால் அதே பிடில் பக்க வாத்தியக்காரருடன் பாடப்பட்டவை. இவைகளையே மீண்டும் ஒலிப்பதிவு செய்து ஒலிபரப்புவதின் மர்மம் என்னவோ? ஜி. என். பி. கச்சேரியின் முற்பகுதி வெகு மோசமாகப் பதிவு செய்யப்பட்டிருந்தது.

திருச்சி
5—1—49 எஸ். மணியன்



## சங்கீத பூஷணங்கள்

தற்சமயம் சென்னைமா நகரில் வசிக்கும் சங்கீத பூஷணங்களைப் பார்த்தால் மிகவும் பரிதாபமா யிருக்கிறது. எத்தனையோ ஆண்டுகள் பாடுபட்டு கஷ்டப்பட்டுத் தேறிய அந்த சங்கீத பூஷணங்களில், ஏதோ ஒரு சிலரைத் தவிர மீதி அனைவரும் 'டியூஷன்'' சொல்லிக் கொடுத்தே காலத்தை ஓட்டுகிறார்கள் என்றால் அது பரிதாபப்படக்கூடிய விஷயந்தானே? அவர்களுக்குத் திறமை யிருக்கிறது. யோக்யதை யிருக்கிறது அற்புதமான சாரீரம் இருக்கிறது நாலு களைச் சவுக்கத்தில் கண்ட ஜாதி திரிபுடை தாளத்தில் பல்லவி பாடும் சக்திகூட இருக்கிறது. இவ்வளவு இருந்தும் அவர்கள் ஏன் முன்னேற மாட்டேனென்கிறார்கள். ஏன் குடத்து விளக்குப் போலிருக்கிறார்கள்? இதற்குக் காரணம் என்ன? என்று விசாரித்தால் சபாக் காரர்கள் தான் காரணம் என்பது தெரியவரும்.

''சபாக்காரர்கள் எங்களுக்குக் கச்சேரி செய்யவே சந்தர்ப்பம் தருவதில்லை. நாங்களாகவே வலியப் போய்க் கேட்டாலும் 'உங்களை ஒருவருக்கும் தெரியாதே. உங்கள் கச்சேரியை வைத்தால் எப்படி வருவார்கள்' என்கிறார்கள். எங்களுக்குப் பணம் தேவையில்லை ஒரு சான்ஸ் தந்தால் போதும். பொது ஜனங்களுக்கு எங்கள் பாட்டைக் கேட்கும்படி செய்தால் போதும்' என்று சொன்னால் 'உங்களுக்குப் பணம் தேவையில்லா விட்டாலும் பக்க வாத்தியக்காரர்களுக்குத் தேவையிருக்குமே. அதற்கு நாங்கள் எங்கே போவது' என்று சொல்லுகிறார்கள். அதனால்தான் நாங்கள் முன்னேறாமல் இருக்கிறோம்'' என்று சொல்லுகிறார் ஒரு சங்கீத பூஷணம்.

சமீபத்தில் நடந்த வித்வத் சபையில் ஸ்ரீமான் ராஜமாணிக்கம் பிள்ளையவர்கள், ''இளம் வித்வான்களை ஆதரியுங்கள்; அவர்களுக்குச் சந்தர்ப்பம் கொடுங்கள்'' என்று கூறியிருப்பதை ஒவ்வொரு சபாக்காரர்களும் நன்கு கவனிக்க வேண்டும். கவனித்தால் மட்டும் போதாது. இனி ஒவ்வொரு மாதமும் நடைபெறப் போகும் கச்சேரிகளிலும், வருஷந்தோறும் நடைபெறும் சங்கீத விழாக்களிலும் இளம் வித்வான்களுக்கும் சங்கீத பூஷணங்களுக்கும் மட்டுமே கச்சேரி செய்ய (பாதி மூன்று மணிக் கச்சேரியல்ல ஐந்து மணிக் கச்சேரி) சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும். இப்படிச் செய்யாத வரையில் சங்கீத பூஷணங்கள் முன்னேறவே முடியாது. அவர்கள் ''டியூஷன்'' சொல்லிக் கொடுப்பதை நிறுத்திவிட்டு சினிமா உலகத்திற்கோ அல்லது நாடக உலகத்திற்கோ போனாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை......!

சென்னை நாகர்கோயில்,
2—1—49 கே. மகாதேவன்



## அகாடமியின் நிர்வாகம்

தாங்கள் 'மியூசிக் அகாடமி'யைப் பற்றி எழுதியிருப்பதைப் படித்தேன். அதன் ஊழல்களை வெகு அழகாக எழுதி யிருக்கிறீர்கள். பாமர மக்கள், ''பெரிய மனிதர்கள் சங்கீத வித்வத் சபை நடத்தி வருகிறார்களே? நன்றாகத் தான் நடத்துகிறார்கள்'' என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் அங்கு நடப்பதென்னவோ ஊழல் தான். சங்கீத வித்வத் சபையில் மாதக் கச்சேரி நடப்பதே கிடையாது. யாராவது ஒரு இளம் வித்வான் டிசம்பர் கூத்தில் எனக்கு ஒரு சந்தர்ப்பம் வேண்டுமென்றால் ''நீ மாதக் கச்சேரியில் பாடு; பிறகு யோசிக்கலாம்'' என்பார்கள். பிறகு கூப்பிடுவதே கிடையாது. சென்ற வித்வானே இவ்வு காந்த இனிமையைப் போல இருக்க வேண்டியதுதானே. நீங்கள் குறிப்பிட்டது போல, முதல் வருஷம் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்க வித்வான்கள் மறுவருஷம் கவனிப்பார் அற்றுக்கிடக்க வேண்டியதுதான். மருந்துக்குக் கூடக் கச்சேரியின் நடுவில் தமிழ்க் கீர்த்தனம் பாடுவது கிடையாது.

வடநாட்டுக் கோஷ்டிகளின் கச்சேரிக்கும் சங்கதிகளையும் பிருகாக்களையும் பொறுமையுடன் (இரவு பத்து மணிக்கு மேல்) கேட்பவர்களே தவிர தமிழ்க் கீர்த்தனம் பாடக் கேட்க மாட்டார்கள். இளம் வித்வான்களை ஆதரிக்கும் லக்ஷணம் வித்வானைப் பாடும்படி செய்துவிட்டு ஹாலுக்கு வெளியே வந்து வெற்றிலை பாக்கு குதப்புவதும் காப்பி சாப்பிடுவதுந் தான் என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவ்விதமாக வருஷம் ஒரு தரம் டிசம்பர் கூத்தடித்துவிட்டு, கர்நாடக சங்கீத கலாசாலையையும், அதற்கான பணம் முழுவதையும் எங்களிடம் ஒப்படைக்க வேண்டுமென்று கேட்பது மிகவும் தவறாகும்.

சென்னை
5—1—49 என். நாத்து

---

★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'சென்னை நிலையம்' என்ற கடிதம் எழுதிய பம்பாய் ஜே. கணேசனுக்கும், 'நிலைய மாற்றம்' என்ற கடிதம் எழுதிய மதுரை ரா. கணேசனுக்கும் ரூ. 12-8-0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

# அழகி சுகுணா

ராஜ்

தம் அருமைப் புதல்வி சுகுணாவுக்குப் பணத்தினால் என்னவெல்லாம் வாங்கிக் கொடுக்க முடியுமோ அவ்வளவையும் வாங்கிக் கொடுத்ததுடன் அழியாத அறிவுச் செல்வத்தையும் அவளுக்கு அளித்து வந்தார் ஸ்ரீமான் வெங்கடராமய்யர். அவள் பி. ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்தபோது தான் வெங்கடராமய்யருக்குத் தம் பெண்ணிற்குக் கல்யாணம் செய்து பார்க்க வேண்டும் என்ற ஆசை வந்தது. அத்துடன் யோசனைகளும் வந்தன. யோசனைகள் உருவெடுத்து ரகுராமனுக்குச் சுகுணாவைக் கல்யாணம் செய்து வைப்பது என்பதில் முடிந்தது.

ரகுராமனும் பி. ஏ. பட்டத்திற்குப் படித்துக்கொண்டிருந்தான். கண்ணுக்கு லக்ஷணமாக இருந்தான். சுகுணாவுக்கு ஏற்ற ஜோடி தான். ஆனால் இருபது வயதில் சுகுணா பி. ஏ. படிக்கிறாள். இருபத்தைந்து வயதில ரகுராமன் பி. ஏ. படிக்கிறான்! இதைக் கேட்ட சுகுணா, "சரி! எங்கேயோ படிப்பில் 'பல்டி' அடித்திருக்கிறார்" என்று புரிந்து கொண்டாள். அவள் நினைத்தபடி ரகுராமன் பி. ஏ வில் 'பல்டி' அடித்துத்தான் இருந்தான். ரகுராமனைப் பார்த்த பிறகு சுகுணாவும் "லக்ஷணமாக இருக்கிறார். படிப்பைத் தவிர வேறு குற்றம் ஒன்றையும் காணோம். முதன் முதலாக வந்த வரன், இவரையே முடித்து விடட்டும்" என்று எண்ணினாள்.

இந்த வரன் அவளுக்கும் பெற்றோர்களுக்கும் திருப்தி அளித்தது. நிச்சயதார்த்தமும் நடந்தது. ஆனால் கல்யாணம் மட்டும் நான்கு மாதங்கள் கழித்து வைத்துக்கொள்ள வேண்டும் என்று ரகுராமனின் தந்தை விரும்பினார். விதிதான் அவரை அப்படி ஒத்திப் போடச் செய்தது போலும்!

இந்த நான்கு மாத இடை வேளையில் சர்வ கலாசாலையார் பரீக்ஷை முடிவுகளை வெளியிட்டார்கள். சுகுணா மாகாணத்திற்கே முதலாவதாகத் தேறியிருந்தாள். மாப்பிள்ளையாக வரப்போகும் ரகுராமனின் நம்பரை எங்கும் காணவில்லை. சுகுணா தேடித் தேடிப் பார்த்தாள். அன்றையப் பத்திரிகைகள் எல்லாம் பார்த்தாள். ஒன்றிலுமில்லை. மறு நாள் 'பிழை திருத்தம்' என்று ஏதாவது வருமோ என்று பார்த்தாள். வரவில்லை. சுகுணாவுக்குத்தான் பாஸ் செய்தது கூடச் சந்தோஷமளிக்கவில்லை. தனக்கு வரப்போகும் கணவன் பாஸ் பண்ணவில்லையே என்பது தான் வருத்தமாக இருந்தது.

சுகுணாவின் தந்தை தம் சம்பந்தியாக வரப்போகும் மனுஷ்யருக்கு "சுகுணா முதலில் பாஸ் செய்திருக்கும் விஷயம் உங்களுக்குச் சந்தோஷம் அளிக்கும் என்று நம்புகிறேன். ஆனால் பையனின் விஷயம் இப்படி ஆனது மனதிற்கு ரொம்பவும் வருத்தமாக இருக்கிறது. இருந்தாலும் கணவன்-மனைவி என்று முடிச்சுப் போட்டு விட்டோமானால் சுகுணா பார்த்துக் கொள்வாள். அவளுக்குத் தன் கணவனை முதலில் பாஸ் பண்ணச் செய்யும் திறமை உண்டு. கவலை வேண்டாம்" என்று மனதில் எவ்வித வித்தியாசமான எண்ணமுமின்றி எழுதினார். அதற்குப் பதில் கடிதமும் கிடைத்தது!

"உம்முடைய பெண் முதலில் பாஸ் செய்த சந்தோஷத்தில் என் பையன் பரீக்ஷையில் தவறியதை நீங்கள் இடித்துக் காட்டியிருக்க வேண்டாம். எனினும் ரகுராமன் உம்முடைய பெண்ணை வாத்தியாராகக்கொண்டு தன் படிப்பை முடிக்க இஷ்டப் படவில்லை. உம்முடைய அகம்பாவமும், உம்முடைய பெண்ணின் இறுமாப்புந்தான் அவ்விதம் எழுத உம்மைத் தூண்டியதுபோலும்! உம்முடைய சம்பந்தமே எனக்கு வேண்டாம். என் பையனும் பிடிவாதமாக வேண்டாம் என்கிறான். இனிமேல் இந்தக் கல்யாண விஷயமாக நான் கடிதப் போக்குவரத்து எதுவும் வைத்துக் கொள்ளத் தயாராக இல்லை" என்று எழுதியிருந்தது.

அக்கடிதம் சுகுணாவை என்னவோ செய்தது. வெங்கடராமய்யரும் முதலில் வருத்தப்பட்டார். "சுகுணா கவலைப்படாதே! நீ அவருக்கு நாட்டுப் பெண் ஆகப்போகிறாய், ரகுராமனுக்குச் சொந்த மனைவியாகப் போகிறாய். இருவருக்கும் உன் வெற்றியில் பங்கெடுத்துக் கொண்டு சந்தோஷப்படத் தெரியவில்லை. குற்றமாக எழுதியிருக்கிறாரே; சீ! இவரும் ஓர் மனுஷ்யரா? என்று சமாதானம் சொல்லித் தம் பெண்ணைத் தேற்றினார்.

கருணாவிற்கு மட்டும் மனசு சமாதானம் அடையவில்லை. தன் மனதில் கனவுகளை வார்த்துவிட்ட ரகுராமனை அவனால் சுலபமாக நிராகரிக்க முடியவில்லை. பெண் மனம் இப்படிச் சஞ்சலப்பட்டது.

கலியாணம் நின்றது. வேறு வரன் தேட வெங்கடாராமய்யர் ஆசைப்பட்டார். கருணாவோ முகம் சுளித்தாள். "அப்பா! கலியாணப் பேச்சு வேண்டாம். ஒரு வருஷம் பொறுத்திருங்களேன்" என்றாள். அவள் மனதில் இந்த ஒரு வருஷம் கழித்தாவது ஒருவேளை ரகுராமன் பாஸ்செய்து விட்டால், மறுபடியும் அவனை அடையலாமே என்ற எண்ணம்.

★

ஒரு நாள் வெங்கடாராமய்யருடைய சிநேகிதர் பலராமன் அவர் வீடுதேடி வந்தார். பலராமன் சென்னையில் பணக்காரர். அவர் "சரஸ்வதி டியுடோரியல் காலேஜ்" என்று ஒரு பள்ளிக்கூடம் நடத்திவந்தார். பரீட்சையில் தவறிப்போகும் மாணவ மாணவிகளுக்கெல்லாம் கைகொடுத்து அபயம் தருவது பலராமனின் "சரஸ்வதி காலேஜ்". பலராமனின் கம்பீரமான தோற்றமும், மேதையும் ஆடம்பரமற்ற வாழ்க்கையையும் பார்த்தால் அவரிடம் யாருக்கும் ஓர் அன்பும் மரியாதையும் செலுத்தத் தோன்றும்.

பலராமன் வெங்கடாராமய்யரிடம் விஷயத்தை அறிந்து "என்னப்பா! இதெல்லாம் சகஜம்தானே! ஏன் வருத்தப்படுகிறாய்? உன் பெண்ணின் அறிவும் ஆற்றலும் அவளுக்கு உற்ற துணையாக இருக்கும். உனக்கு ஒரு யோசனை சொல்கிறேன். என் கலாசாலையில் 'பொருளாதாரம்' வகுப்பு ஏற்படுத்தப் போகிறேன். கருணா இஷ்டப் பட்டால் அவளுக்கு வேலை கொடுக்கிறேன். அவள் படித்த படிப்பு வீணாகாமல் மனதில் ஓர் சாந்தி ஏற்பட உதவும். யோசித்துச் சொல்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

கருணா இந்த யோசனைக்குச் சம்மதித்தாள். கல்லூரியில் பொருளாதாரப் பேராசிரியையாகச் சேர்ந்து விட்டாள்.

பேராசிரியை கருணா சரஸ்வதி டியுடோரியல் காலேஜில் பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்ததிலிருந்து திடீரென்று மாணவ மாணவிகளுக்கு "பொருளாதாரத்தில்" ஓர் ஆசை விழுந்து விட்டது. கருணாவின் வாக்கு வன்மையும், சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் திறமையும், தன்னடக்கமும், புன் சிரிப்பும், 'படித்தால் இப்படிப் பட்ட வாத்தியாரிடம் படிக்க வேண்டும்' என்ற ஓர் ஆசையை உண்டாக்கியது.

ஒருநாள் பலராமன் கருணாவைத் தம் அறைக்குக் கூப்பிட்டார். அவர் அருகே ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். "கருணா! இதோ சுந்தரியை அறிமுகப்படுத்துகிறேன். இந்த வருஷம் இவர் பி. ஏ. போகிறார். பொருளாதாரத்தில் தனிப்பாடம் வேண்டுமாம். உன்னைச் சிபாரிசு செய்திருக்கிறேன். பள்ளிக்கூடம் முடிந்ததும் 'கார்' வரும்; நீ அவர்கள் வீட்டுக்குப் போய் வாரத்தில் ஒரு மணி நேரம் பாடம் சொல்லிக் கொடு" என்றார். "சரி" என்று ஒப்புக்கொண்டு சுந்தரியை நோக்கி ஓர் புன்னகை புரிந்து விட்டு வந்தாள். தன் அறையில் நுழைந்து ஒரு மணிக்கெல்லாம் மறுபடியும் பலராமன் கருணாவைக் கூப்பிட்டு அனுப்பினார்.

'இந்தத் தடவை யாரோ!' என்று எண்ணிக் கதவைத் திறந்தவள் அப்படியே ஸ்தம்பித்து நின்றாள். பலராமன் அருகில் உட்கார்ந்திருந்த ஆசாமி ஓர் பெண்மணி அல்ல, ஓர் ஆண் சிங்கம்! 'அதுவும்...உம் பெண்ணை வாத்தியாராகக் கொண்டு என் பிள்ளையின் படிப்பை முடிக்க இஷ்டப்பட



வில்லை' என்று கடுமையாக எழுதிய ஆத்மாவின் திருக்குமாரனான ரகுராமன்!

ரகுராமனும் இவளை ஏற இறங்கப் பார்த்தான். "கருணா! மிஸ்டர் ரகுராமன் இன்று முதல் உன் வகுப்புக்கு வருவார். கொஞ்சம் கூடக் கவனித்துச் சொல்லிக் கொடு. இந்த வருஷமாவது இவர் பாஸ் செய்ய வேண்டும்" என்றார் பலராமன்.

ரகுராமனுக்கு ஓடி விடுவோமா என்ற எண்ணம் ஏற்பட்டது. கருணாவிற்கோ ஓர் வெற்றிக் கொடி காட்டியதாக இறுமாப்பு! தன் கனவு நனவாகும் போன்ற ஓர் எண்ணம்! தன்னிடமே ரகுராமன் படிக்கப் போகிறார். அவருக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து 'பாஸ்' செய்யச் செய்து விட்டால்...ஆஹா! தன் ஆசை கைகூடி விடும்! இவ்வளவு உணர்ச்சிகளையும் அடக்கிக் கொண்டாள். ஆனால் உள்ளூற ஆனந்தப் பட்டுக் கொண்டிருந்தாள் கருணா!

ரகுராமனுக்கோ என்றால் முதலில் கருணாவிடம் பாடம் கேட்பது என்பது ஈனமான காரியம் என்று தோன்றிற்று. ஆனாலும் "இவளுக்கும் நமக்கும் என்ன பாத்தியம்? மனைவியாக ஒரு காலத்தில் வரவேண்டியவளாக இருந்தாள். அது தான் இப்போது இல்லையே" என்று எண்ணினான். தவிரவும் அவளுடைய மேதையும் வாக்கு வன்மையும் ரகுராமனை அவளிடம் பக்தியையும் மரியாதையையும் கொள்ளச் செய்தன. குருவாக மதிக்கும்படி தோன்றியதே தவிர வேறு எந்த விதமான எண்ணமும் அவன் மனதில் உதிக்கவில்லை. அவளுக்கேற்ற கணவன் எவருமில்லை; மலைக்கும் மடுவுக்கும் உள்ள சம்பந்தம் தான் தனக்கும் கருணாவுக்கும். 'கருணா! அந்த கருணா எங்கே! இங்கே எனக்கு குருவாக இருக்கும் கருணா எங்கே?' என்று குரு பக்தியில் ஈடுபட்ட ரகுராமன் தன் படிப்பைச் சீக்கிரம் முடித்துக் கொண்டு ஓட ஆசைப்பட்டான்.

சுந்தரி ரொம்பவும் புத்திசாலி. கருணாவிடம் பயபக்தியுடன் பாடம் கற்று வந்தாள். சுந்தரியின் சாமர்த்தியத்தையும் ஆர்வத்தையும் கண்டு கருணா வியந்தாள்.

ஒரு நாள் பாடம் முடிந்து கருணாவும் சுந்தரியும் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருக்கையில் "சுந்தரி! பி. ஏ. படித்து முடித்த பிறகு நீ என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டாள் கருணா.

"செய்வது என்ன! நம் முறைப்படி கலியாணம்தான்!" என்றாள் சுந்தரி.

"அது சரியம்மா! படிப்பு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு படித்து விட்டாய். மனதுக்கு ஏற்ற கணவன் உனக்கு வாய்க்க வேண்டுமே. அப்பா அது விஷயமாக ஏதாவது முடிவு செய்திருக்கிறாரா?"

"அநேகமாக முடிந்தாற்போல்தான்"

"பலே! அப்படிச் சொல்லு. எனக்கு நல்ல சாப்பாடு இருக்கிறது. உனக்கு வரப் போகும் கணவர் யார்? என்ன செய்கிறார்! உனக்கு வாய்க்கும் கணவன் உன்னைவிடப் பெரிய மேதாவியாகத்தான் இருக்கவேண்டும்! யார் என்று சொல்லலாம் என்றால் சொல்லு" என்றாள் கருணா.

"சரிதான்! உங்களுக்கு அந்த விஷயத்தில் ஏமாற்றம் அளிக்கப் போகிறேன். வருபவர் என்னமோ ஆள் ஜோராகத்தான் இருக்கிறார்; ஆனால்......"

"ஆனால், என்ன?"

"அந்த மேதாவி இன்னும் படித்துக் கொண்டுதான் இருக்கிறார்!"

"அப்பா! இதுதானா பிரமாதம்!"

"என்ன தப்படிச் சொல்லிவிட்டீர்கள்? அவர், ஒவ்வொரு வருஷமும் படித்துக் கொண்டே இருக்கிறார். ஆனால் பாஸ் தான் ஆகவில்லை......"

"அவர் என்ன படிக்கிறார், சுந்தரி!

"பி. ஏ! இன்னும் ஒரு பாகம் பாஸாக வில்லை. இந்த வருஷமாவது 'பாஸ் செய்தால் என் பாக்கியம். இல்லை என்றால் என்ன நடக்குமோ" என்றாள் சுந்தரி.

"என்ன நடக்குமோ?" இதைக் கேட்ட கருணாவின் மனதில் நினைவு அலைகள் மோதி வந்தன. அவள் கண்கள் இருளடைந்தன. ஒரு கேள்வி மட்டும் கேட்டுவிட ஆசை கொண்டாள் — "சுந்தரி, அவர் பெயர் என்ன?"

"ரகுராமன்" என்ற வார்த்தைகள் அவள் தலையில் அடித்தாற்போல் வந்தன. "என்ன ரகுராமனா?" என்று சொல்லிக்கொண்டே கருணா பிரமித்து நின்றாள். அப்பொழுது சரஸ்வதி டியுடோரியல் கலாசாலையின் பெரிய மணி ஒலித்தது. "கருணா, நீ ஒரு சிறு வீட்டில் இருந்துகொண்டு இல்லற வாழ்க்கை நடத்தச் சிருஷ்டிக்கப்பட வில்லை. உன்னால் அநேக காரியங்கள் நடக்கவேண்டும்" என்று கலைவாணியே கூப்பிட்டுச் சொன்னது போன்ற உணர்ச்சி அழகி கருணாவுக்கு ஏற்பட்டது!

# தேகாப்பியாசம் செய்யும்போது..

## . . . ஓவல்டின் மேலும் சக்தியை ஊட்டுகிறது



நீங்கள் ஆடும்போதும் தேகாப்பியாசம் செய்யும்போதும் "ஓவல்டின்" சக்தி அளிக்கிறது. அது புஷ்டிதரும் பானமாக உலகில் பிரஸித்தி பெற்றது. அதில் பார்லிச் சத்து, சுத்தமான பால், கொக்கோ, இயற்கைச் சத்துக்களும் வைட்டமின்களும் அடங்கியுள்ளன. அயர்ந்த நித்திரைக்கு இரவிலும் பலத்துக்கு பகலிலும் "ஓவல்டின்" அருந்துங்கள்.

# 'OVALTINE'

## 'ஓவல்டின்'

### ஆட்டக்காரர்களுக்கு ஆரோக்கிய பானம்

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட், த. பெ. நெ. 1205, மதராஸ் மற்றும் பம்பாய், கராச்சி, கல்கத்தா லாஹூர், தி இங்கிலீஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோ-ஆபரேடிவ் ஹோல்சேல் சொஸைட்டி லிமிடெட், கள்ளிக்கோட்டை (மலபார் கோஷ்டுக்கு)




OV. 282



# தைக்கும் இந்த மோவாய்க் கட்டையினால் அதிகச் செலவு ஏற்படுகிறது

அநேக மனிதர்கள் ஏழு நாட்களில் நான்கு நாட்கள் க்ஷவரம் செய்துகொள்ளுவதில்லை. அவர்களுக்கு ஒரு வாரத்தில் மூன்று தடவைகளுக்கு மேல் நாவிதனை அழைப்பது சாத்தியமில்லை. இதற்கே குறைந்தது ஆறு அணாக்கள் செலவாகும். ஆறு அணாக்கள் செலவுசெய்வதே அதிகம் தான். அவ்வாறு செலவுசெய்தாலும் க்ஷவரம் செய்துகொள்ளாத நாட்களில் தைக்கும் மோவாய்க்கட்டையோடிருக்க வேண்டியதுதான்.

# இந்த மிருதுவான மோவாய்க் கட்டைக்கு குறைந்த செலவு!



நீங்கள் 7 ஓ' க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுகிறீர்களானால், வாரத்தில் ஒவ்வொரு நாளும் மிருதுவான மோவாய்க் கட்டையை உடைத்தாயிருப்பதுடன் பணத்தையும் மிச்சப்படுத்துவீர்கள். ஐந்து பிளேடுகளடங்கிய ஒரு பாக்கெட்டின் விலை அணா 6—நாவிதன் செய்யும் மூன்று க்ஷவரங்களின் கிரயத்துக்குச் சமமானது--ஒரே பாக்கெட்டிலுள்ள உன்னதமாகவே கூருள்ள பிளேடுகளால் நீங்கள் பல வாரங்கள் க்ஷவரம் செய்துகொள்ளலாம்.

மார்க்கெட்டில் 7 ஓ. க்ளாக் பிளேடுகள்தான் மிகச் சிறந்தவை. நல்ல கூர்மையானவை—உயர்ந்த எஃகினால் மும்முறை சாணை தீட்டப்பெற்றவை. பணம் கொடுத்து வாங்குவதற்குத் தகுதியான மிகச்சிறந்த பிளேடுகள்.

**தினந்தோறும் 7 ஓ க்ளாக் பிளேடுகளால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்.**







குறைந்த செலவில் அதிக க்ஷவரங்கள் அளிக்கும் பிளேடுகள்

5 பிளேடுகளடங்கிய ஒரு பாக்கெட்டுக்கு அணா 6

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392